# ஸ்ரீமத் ஆசார்யேந்த்ர விஜயம்

ஸ்ரீ ஜகத்குரு - - - -

ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ

- - - ஸ்வாமிகள் சரித்திரம்






R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் இயற்றியது.

## மஹான்கள் சரித்திரங்கள்

| | |
|---|---|
| गुरुवंशकाव्यम्  १ - ७ सर्गाः | 1—8—0 |
| गुरुत्रयाष्टोत्तरशतनामस्तोत्रम् | 0—4—0 |
| Life of His Holiness Sri Sacchidananda Siva Abhinava Narasimha Bharati Swamigal, Jagadguru of Sringeri | 1 8 0 |
| The Greatness of Sringeri | 0 10 0 |
| Sri Jagadguru Sri Chandrasekhara Bharati Swaminah—A short Life-Sketch | 0 10 0 |
| From the Master's Lips | 1 0 0 |
| ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் சரித்திரம் | 1—0—0 |
| ஸ்ரீ ஜகத்குரு சந்திரசேகர பாரதீ ஸ்வாமிகள் சரித்திரம் (இரண்டாம் பதிப்பு) | 0—10—0 |
| ,, ஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் சரித்திரம் | 0—12—0 |
| ,, நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் சரித்திரம் | 0—6—0 |
| ஸ்ரீ ராமாநந்த ஸரஸ்வதீ ஸ்வாமிகள் சரித்திரம் | 1—0—0 |
| ஸ்ரீ சிருங்கேரி மஹிமை | [In the Press |

# ஸ்ரீமத் ஆசார்யேந்த்ர விஜயம்

ஸ்ரீ ஜகத்குரு

ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ

ஸ்வாமிகள் சரித்திரம்

R. கிருஷ்ணஸ்வாமி அய்யர் இயற்றியது.




ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்

—— ஸ்ரீரங்கம் ——

அணா 12] 1953 [தபால் வேறு

# முகவுரை





ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாரின் அவதாரமென்று பிரஸித்தி பெற்றிருந்த ஸ்ரீமத் ஆசார்யாரவர்களான ஸ்ரீ சிருங்கேரி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீஸ்வாமிகளவர்களுடைய சரித்திரத்தை அவர்கள் கூடவே பால்யம் முதலிருந்து ஸேவை செய்து கொண்டு ஸ்ரீமடம் ஸர்வாதிகாரியாயிருந்த ஸ்ரீகண்ட சாஸ்திரிகள் கன்னட பாஷையில் எழுதியிருக்கிறார்கள். அதைத் தெலுங்கில் ஸ்ரீமான் N. குப்புஸ்வாமி அய்யரவர்கள் தர்ஜமா செய்து அச்சிட்டார்கள். தமிழ் தர்ஜமாவை குருபக்த சிகாமணி ஸ்ரீமான் T. K. பாலஸுப்ரஹ்மண்ய அய்யரவர்கள் ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்ஸில் 1925-ம் வருஷம் அச்சிட்டார்கள். ஆனால் அச்சிடப்பட்ட எல்லா பிரதிகளும் வெகு சீக்கிரம் செலவழிந்து விட்டதால் இப்பொழுது பிரதிகள் அகப்படவில்லை. ஸ்ரீமத் ஆசார்யாரின் சரித்திரத்தை மறுபடியும் அச்சிட வேண்டுமென்று அநேகம் சிஷ்யர்கள் கேட்டு வருகிறார்கள். இருந்தாலும் தத்கால ஸௌகர்யத்தை யுத்தேசித்து சுருக்கமாய் எழுதிப் பிரசுரிப்பதே உசிதமென்று தோன்றி, அநேகமாய் அந்த தமிழ் தர்ஜமாவையே ஆதாரமாக வைத்துக்கொண்டு இந்த சரித்திரம் எழுதப்பட்டிருக்கிறது. இதை வாசகர்கள் பக்தியுடன் வாசித்து ஸத்குருப் பிரஸாதம் அடைவார்களாக!

15-2-53 R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்.

# அட்டவணை

---



---

# படங்களின் விவரம்



ஸ்ரீ சாரதாம்பா, சிருங்கேரி



ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ
நரஸிம்ஹ பாரதீஸ்வாமிகள்



குனிகல் ராம சாஸ்திரிகள்.



குனிகல் லக்ஷ்மீ நரஸிம்ஹ சாஸ்திரிகள்.

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ஸ்ரீமத் ஆசார்யேந்த்ர விஜயம்

## ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகள் சரித்திரம்.

### அத்தியாயம் 1.

### ஜனனம்.

மைஸூர் ஸம்ஸ்தானத்தை மஹாராஜா மும்மடி கிருஷ்ணராஜப்பிரபுக்கள் ஆண்டு வந்த ஸமயம் ஆஸ்தான வித்வானக குனிகல் ராமசாஸ்திரிகள் என்ற ஒரு மஹான் இருந்து வந்தார். அவர் ஆத்மகுணங்களில் சிறந்தவராகவும், கர்மானுஷ்டான நிரதராகவுமிருந்ததுடன், சாஸ்திரங்களில், விசேஷமாக தர்க்க வேதாந்தங்களில், மிகவும் பாண்டித்யம் பெற்று பிரஸித்தராக விருந்தார். தர்க்கத்தில் 'சதகோடி' என்கிற உத்தமமான கிரந்தமெழுதினதினல் இவருக்கு 'சதகோடி ராமசாஸ்திரிகள்' என்றே பிரஸித்தி ஏற்பட்டுவிட்டது. அந்தக் காலத்தில் தக்ஷிண தேசத்திலிருந்த தார்க்கிக வித்வான்களெல்லாரும் இவருடைய சிஷ்யர்களாகவே இருந்து வந்தார்கள்.

ஒருசமயம் இம்மஹான் சிருங்கேரி ஜகத்ருரு பீடாதிபத்யம் வஹித்துவந்த ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமி

களை தர்சிக்கப் போகும்போது தன் குமாரரான சுமார் 16 வயதுள்ள லக்ஷ்மீநரஸிம்ஹ சாஸ்திரிகளையும் தன்னுடன் அழைத்துச் சென்றார். இப்பாலகனுடைய பாண்டித்யத்தையும் தேஜஸ்ஸையும் பார்த்து ஸ்ரீமத் ஆசார்யார் மிகவும் ஸந்தோஷப்பட்டார்கள். அவர்கள் ஸந்தோஷப்பட்டமாதிரியில் இப்பாலகனை ஸ்ரீமடத்திற்குக் கொடுக்கும்படி கேட்பார்களோ என்ற ஸந்தேஹம் ராம சாஸ்திரிகளுக்கு ஏற்பட்டுவிட்டது. அதற்கு இடமில்லாமல் செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் ஊருக்கு வந்தவுடன் இப்பாலகனுக்கு விவாஹம் செய்து வைத்துவிட்டார். கொஞ்சநாள் கழித்து இவர் ஸம்ஸாரம் லக்ஷ்மியம்மாள் கர்ப்பவதியானாள். இந்த ஸமாசாரம் சிருங்கேரிக்கு எட்டியவுடன் ஸ்ரீமத் ஆசார்யார் "ராம சாஸ்திரி இப்பொழுது என்ன செய்வார்?" என்று கேட்டார்கள். இதிலிருந்து ஸத்யஸங்கல்பரான ஸ்ரீமத் ஆசார்யாரவர்களுடைய ஸங்கல்பத்தினாலேயே இந்த ஸந்தானமேற்பட்டதாக நினைக்க இடமிருக்கிறது.

ராமசாஸ்திரிகள் தனக்கு 50 வயதுக்குமேல் ஸந்தானமேற்படுவதனால் இது புருஷப் பிரஜையாகவே இருக்கவேண்டுமென்ற தீர்மானத்துடன் ஸம்பிரதாயமில்லாதிருந்தபோதிலும் இந்த கர்ப்பத்திற்கு பும்ஸவன ஸம்ஸ்காரம் செய்தார். இதன்பிறகு ஒருநாள் நஞ்சன்கூடில் ஸ்ரீகண்டேசுவரர் ஆலயத்திற்கு தர்சனம் செய்யப் போகும்போது தன்னுடன் வந்துகொண்டிருந்த ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி என்ற சிஷ்யனைப் பார்த்து "இப்போது நமக்கு ஜனிக்கப்போகும் குமாரனுக்கு என்ன

நாமதேயம் வைத்தால் நன்றாக இருக்கும்? உங்கள் சோழ தேசத்தில் சிவநாமாக்களில் எந்த நாம விசேஷமாக வைப்பது வழக்கம்?" என்று கேட்டார். அதற்கு சிஷ்யன் "ஸ்வாமி, தாங்கள் ஸகலமும் தெரிந்தவர்கள். இனி பிறக்கப்போகும் குழந்தை ஆணு, பெண்ணு என்று தெரிந்துகொண்ட பிறகு தானே பெயர் வைப்பதைப்பற்றி ஆலோசிக்கவேண்டும்?" என்றான். அதற்கு அவர் "ஏன் உனக்கு இவ்வளவு ஸந்தேஹம்? நான் பும்ஸவனம் செய்திருக்கிறேனே! புத்திரனே ஜனிக்கப்போகிறான். நான் கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லு" என்றார். உடனே அவன் மன்னிப்பு கேட்டுக்கொண்டு "சிவஸ்வாமி என்று வைக்கலாமென்று தோன்றுகிறது" என்றான். அப்படியே செய்வதென்று சாஸ்திரிகள் நிச்சயம் செய்துகொண்டார். கர்ப்பம் கிரமமாக விருத்தியாகி பிங்கள-ஹு (1858) பால்குன கிருஷ்ண ஏகாதசி குரு வாரம் சிரவண நக்ஷத்ரத்தில் மகர ராசியில் ராத்திரி 9-மணிக்கு புருஷப் பிரஜை பிறந்தது. அதே க்ஷணத்தில் ராஜதானியில் ஸ்வபாவமாகவே ராத்திரி 9-மணிக்கு போடப்படும் குண்டு சப்தம் ஏற்பட்டதை எல்லோரும் சுபசகுனமாக பாவித்தார்கள். ராம சாஸ்திரிகளுக்கு ஏற்பட்ட ஸந்தோஷத்திற்கு அளவில்லை. கிரமப்படி ஜாதகர்ம நாமகரணாதி ஸம்ஸ்காரங்களை விமர்சையாக நடத்தினர்.

ஒரு வருஷம் பூர்த்தியாவதற்குள்ளேயே நடக்கவும் பேசவும் ஆரம்பித்துவிட்டது குழந்தை. தன் தகப்பனருடைய ஒளபாஸன விபூதியை மேலெல்லாம் பூசிக்

கொண்டு தகப்பனார் ஸ்தோத்திர சுலோகங்கள் சொல்லும்போது கரதாளத்துடன் ந்ர்த்தனம் செய்து வருவான். இதிலிருந்தே பூர்வஜன்ம வாஸனை நன்கு தெரிந்தது. இவருடைய பால்ய லீலைகளைக் கண்டு வெகு ஸந்தோஷமாய் அனுபவித்துக்கொண்டுவந்த பெற்றோர்களில் தகப்பனார் இவருடைய இரண்டாவது வயதிலும், தாயார் ஐந்தாவது வயதிலும் காலகதியடைந்து விட்டார்கள். பின்னால் தமயனாரான லக்ஷ்மீநரஸிம்ஹ சாஸ்திரிகளுடைய ஸம்ரக்ஷணையிலேயே இவர் இருந்து வந்தார். பின்னாலும் இந்த தமயனாரிடத்திலேயே தர்க்க வேதாந்த சாஸ்திரங்களை அப்யஸித்து பாண்டித்யம் பெற்றார். க்ரோதன வருஷம் ஜ்யேஷ்ட சுத்தத்தில் உபநயனம் செய்துவைத்தார். முக்யமான வேதபாகங்களையும் அத்யயனம் செய்து வைத்தார்.

---

## அத்தியாயம் 2.

### ஸந்யாஸம்.

சிருங்கேரியில் ஸ்ரீமத் ஆசார்யார் சிஷ்யபரிக்கிரஹம் விஷயமாக ஆலோசித்துக்கொண்டிருக்கும் சமயம் தன் முன் ஒரு ஸுவாஸினீ தோன்றி "ஸ்தலம் விடு" என்று சொன்னதாக இவர்களுக்குத் தோன்றிற்று. உடனேயே சிருங்கேரியை விட்டு மைஸூர் விஜயம் செய்தார்கள். அங்கு வந்தவுடன் மஹாராஜர் மூலமாக சொல்லியனுப்பி இந்த பாலகரைத் தன் ஸமீபம் வர



ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீஸ்வாமிகள்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், பூஜா ஸமயம்.

வழைத்து பக்கத்தில் உட்கார்த்திக்கொண்டு மிக்க ஆதரவுடன் "உனக்கு என்னப்பா வேண்டும்?" என்று கேட்டார்கள். உடனே இந்த பாலகர்,

अयं दानकालस्त्वहं दानपात्रं
भवानेव दाता त्वदन्यं न याचे ।
भवद्भक्तिमेव स्थिरां देहि मह्यं
कृपाशील शम्भो कृतार्थोऽस्मि तस्मात् ॥

என்ற சிவபுஜங்க ஸ்தோத்ர சுலோகத்தைச் சொன்னர். இதைக் கேட்டவுடன் ஆசார்யாருக்கு வந்த ஸந்தோஷத்திற்கு அளவேயில்லை. இவரையே தனக்குப்பின் பீடாதிபதியாகச் செய்ய வேண்டுமென்று தீர்மானித்து மஹாராஜாவிடம் தெரிவித்தார்கள். லக்ஷ்மீநரஸிம்ஹ சாஸ்திரிகளுக்கும் சொல்லியனுப்பினர்கள். சாஸ்திரிகள் இவ்விஷயத்திற்கு ஸம்மதிக்காததினல் நேரில் வரவழைத்துச் சொல்லியும் பார்த்தார்கள். அதிலும் சாஸ்திரிகள் இணங்காததினல் "இப்பாலகனுக்கு 16வது வயதில் ஜாதக ரீதியாய் ஒரு கண்டம் வருகிறது. ஸந்யாஸமேற்பட்டிருந்தால் ஸ்ரீ சாரதாம்பிகை அநுக்ரஹத்தினல் நிவிருத்தியாகும்" என்று சொன்னர்கள். இதில் கொஞ்சம் பயமேற்பட்டபோதிலும் ஸம்மதித்துவிட மனம் இடம் கொடுக்கவில்லை. பிறகு மஹாராஜாவே லக்ஷ்மீநரஸிம்ஹ சாஸ்திரிகளைக் கூப்பிட்டு நிர்பந்தமாக சில வார்த்தைகள் சொல்லும்படி ஏற்பட்டது. ஸ்ரீமத் ஆசார்யாரவர்களுக்கும் மஹாராஜா அவர்களுக்கும் அதிருப்தி ஏற்படக்கூடாதென்று நினைத்தும், பகவத் ஸங்கல்பத்தை

மீறி நடக்க யத்தனிப்பது நியாயமில்லையென்றும் ஸ்ரீ சாஸ்திரிகள் ஒருவாறு ஸமாதானம் செய்துகொண்டார்.

மஹாராஜா அக்ஷயவருஷம் ஆஷாடசுத்த பஞ்சமீ, மத்தியானம் 4 மணி ஸமயத்தில் அரண்மனையிலிருந்து தக்க மனுஷ்யர்களை அனுப்பி பல்லக்கில் ஏற்றி சிவஸ்வாமி சாஸ்திரிகளை தன் அந்தப்புரத்திற்கு வரவழைத்துக் கொண்டார். பிறகு அந்தப்புரத்திலுள்ள ஜனங்களிடம் "இந்த சாஸ்திரிகள் நாளையதினம் நமக்கு குருவாகிறார்" என்று சொல்லி எல்லோராலும் நமஸ்காரம் செய்து வைத்து ராஜ மரியாதைகளுடன் கிருஹத்திற்கு அனுப்பிக்கொடுத்தார். மறுநாள் காலை 6 மணிக்கே அரண்மனையிலிருந்து யேனைப்பல்லக்கு, சத்ரம், சாமரம் முதலான மரியாதைகளை யனுப்பி லக்ஷ்மீநரஸிம்ஹ சாஸ்திரிகளுடைய கிருஹத்திலிருந்து சிவஸ்வாமி சாஸ்திரிகளை ஸ்ரீமத் ஆசார்யாரிடம் அழைத்துச் சென்றார்கள். ஸ்ரீமத் ஆசார்யாரின் அனுக்ஞை பெற்று லக்ஷ்மீரமண தேவாலயத்தில் எல்லா பூர்வாங்கங்களும் நடந்து, அங்கிருந்து கால்நடையாக 'மைஸூர் காளஞ்சி ஏரி' என்ற தடாகத்திற்குப் போனவுடன் ஸ்ரீமத் ஆசார்யாரும் அங்கே விஜயம் செய்தார்கள். அங்கே ஜலமத்தியில் விதிவத்தாக ப்ரைஷோச்சாரணமான பிறகு ஆசிரமத்திற்கு யோக்யமான கடிஸூத்ர கௌபீன வஸ்திராதிகளைப் பெற்று மறுபடியும் லக்ஷ்மீரண தேவாலயத்திற்கு வந்து அங்கு கிரமப்படி ஸ்ரீமத் ஆசார்யாரிடமிருந்து மஹாவாக்யோபதேசம் அடைந்தார்கள்.

யோகபட்டம் கொடுக்கும் ஸமயம் தன் குருவாண

அபிநவ ஸச்சிதானந்த பாரதீ ஸ்வாமிகளுடைய பெய ரிருக்க வேண்டுமென்று ஸ்ரீமத் ஆசார்யாரும், தன் குரு வான ஸ்ரீமத் ஆசார்யார் நரஸிம்ஹ பாரதீ ஸ்வாமிகளு டைய பெயரிருக்கவேண்டுமென்று மஹாராஜாவும், ஜனனத்திற்கு முன்னாலேயே ஸங்கல்பித்த சிவநாமம் ஸம்பந்தப்பட்டிருக்க வேண்டுமென்று அங்குள்ள பண்டி தர்களும் அபிப்பிராயப்பட்டார்கள். பிறகு ஸர்வஸம்மத மாக "ஸச்சிதானந்த சிவ அபிநவ நரஸிம்ஹ பாரதீ" என்பதாக யோக பட்டம் கொடுக்கப்பட்டது.

எல்லாக் காரியங்களும் முடிய அஸ்தமனம் வரை ஆகி விட்டது. உடனே ஸ்நாநம் செய்வித்து ஸ்ரீமத் ஆசார் யார் சின்ன ஸ்வாமிகளுக்கு ஸாயங்கால ஆஹ்நிகங்களை யும் செய்வித்து லகுவாக பொரியை ஆஹாரமாக கொடுப் பித்துவிட்டு, தான் ஆஹ்நிகம் செய்வதற்கு உட்கார்ந்து கொண்டிருந்த இடத்திலேயே ஒரு கிருஷ்ணாஜினத்தின் மேல் சின்ன ஸ்வாமிகளைப் படுத்துக்கொள்ளச் சொன்னார் கள். உடனே நன்றாக நித்திரை வந்துவிட்டது. கொஞ்ச நேரம் சென்றவுடன் சின்ன ஸ்வாமிகள் ஸ்வப்னத்தில் सर्वोऽहं सर्वोऽहं सर्वोऽहं என்று மூன்று தடவை சொன் னார்கள். இதைக்கேட்ட பெரிய ஸ்வாமிகளுக்கு ஏற்பட்ட ஸந்தோஷத்திற்கும் ஆச்சரியத்திற்கும் எல்லையே இல்லை.

பிறகு ஸம்ஸ்தான வழக்கப்படி லௌகிகமாய் பட்டா பிஷேக மஹோத்ஸவம் நடத்தப்பட்டது. இவ்வைபவங் களை யெல்லாம் மஹாராஜாவே கூடவிருந்து நடத்தி வைத்துவிட்டு பின்னால் தனித்து சின்ன ஸ்வாமிகளை

தரிசிக்க வந்த சமயம் "தங்களுக்கு என்ன வேண்டும்" என்று கேட்டதும், "ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்தின் வாசலில் இரு பக்கங்களிலுமிருந்து சாமரம் போடுவதற்காக இரண்டு யானைக்குட்டிகள் வேண்டும்" என்றார். உடனே மஹாராஜா மிகவும் ஸந்தோஷப்பட்டு தன் கஜசாலைக்கு சொல்லியனுப்பி, அங்கு ஸித்தமாயிருந்த ஒரு பெண் யானைக்குட்டியை வரவழைத்து சின்ன ஸ்வாமிகளுக்கு அனுப்பிக்கொடுத்தார். பிறகு சிலநாள் மைஸூரி லிருந்துவிட்டு ஸ்ரீமத் ஆசார்யார் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை யுத்தேசித்து "பச்சிமவாஹினீ" என்ற ஸ்தலத்திற்கு சிஷ்யருடன் விஜயம்செய்து சாதுர்மாஸ்ய தீக்ஷையை ஆரம்பித்தார்கள். சாதுர்மாஸ்யம் முடிந்தவுடன் தக்ஷிணதேச யாத்திரையாகவே புறப்பட்டுவிட்டார்கள்.

சின்ன ஸ்வாமிகளுக்கு முதலில் கணகாலூர் சாமா சாஸ்திரிகளும், பிறகு லக்ஷ்மீ நரஸிம்ஹ சாஸ்திரிகளுமே காவ்ய பாடம் சொல்லிவந்தார்கள். 12வது வயதில் தர்க்கபாடம் ஆரம்பிக்கப்பட்டது. ஸஹபாடிகளாக திராவிட தேசத்திலிருந்து சில சிறுவர்களையும் சேர்க்கப்பட்டது. ஸ்ரீமத் ஆசார்யாரவர்களும் ஸௌகர்யம் போல் தர்மஸூக்ஷ்மங்களை போதித்து வந்தார்கள். சின்ன ஸ்வாமிகளிடம் பெரியவருக்கு இருந்த வாத்ஸல்யம் எல்லையற்று இருந்தது. யாத்திராக் கிரமமாக நன்சன்கூடுக்கு விஜயம் செய்த சமயம் சின்ன ஸ்வாமிகளுக்கு சரீரத்தில் கொஞ்சம் அஸௌகர்யமேற்பட்டவுடன் ஸ்ரீ கண்டேசுவரர் தேவாலயத்திற்குப் போய் தன் கையால்

விசேஷமாக பூஜைசெய்து பிரார்த்தனை செய்துகொண்ட துடன், சின்ன ஸ்வாமிகளைப்போல் ஒரு ஸ்வர்ண ப்ர திமை செய்வித்து ஸ்ரீகண்டேசுவரர் ஸோமாஸ்கந்த மூர்த்தியின் பீடத்தில் ஸ்திரமாய் இருக்கும்படி செய்து வைத்தார். அன்றையதினமே சின்ன ஸ்வாமிகளுக்கு ஆரோக்கியமேற்பட்டு ஸ்ரீமத் ஆசார்யாருடன் தானும் தேவாலயம் போய் தர்சனம்செய்து ஆனந்திக்கும்படி ஏற்பட்டது. பிறகு நஞ்சன்கூடிலிருந்து சாமராஜ நகரம் வந்து கணவாய் இறங்கி கோயமுத்தூர், சேலம், திருச்சி னுப்பள்ளி, மதுரை, திருநெல்வேலி, செங்கல்பட்டு, வட ஆற்காடு, மதறாஸ், கடப்பை, கர்னூல் முதலிய பிரதேசங் கள் வழியாக ஸஞ்சாரம்செய்துகொண்டு ஈசுவர வருஷம் ஆஷாடபகுள த்விதீயை (27-7-1877) சுக்ர வாரத்தன்று சிருங்கேரிக்கு சின்ன ஸ்வாமிகளுடன் வந்துசேர்ந்தார்கள். ஆக இந்த யாத்திரை பன்னிரண்டு வருஷ காலமாகி விட்டது. அப்பொழுது பெரிய ஸ்வாமிகளுக்கு வயது எண்பது. சின்ன ஸ்வாமிகளுக்கு இருபது. சிருங் கேரிக்கு வந்து சிலதினங்களுக்குள் மைஸூர் மஹாராஜா கிருஷ்ணராஜ பிரபுக்களின் ராணி ஸீதா விலாஸ தேவ ராஜ அம்மணியவர்கள் தன் புத்திரனும் அப்பொழுது மஹாராஜாவாயுமிருந்த சாமராஜ உடையாருக்கு இரண்டு ஸ்வாமிகளுடைய அனுக்ரஹத்தையும் ஏற்படுத்திக் கொடுக்கக் கருதி பிரார்த்தித்துக் கேட்டுக்கொண்டதின் பேரில் இருவரும் மைஸூர் விஜயம்செய்து மஹாராணி யின் மனோரதத்தை பூர்த்திசெய்து சிருங்கேரிக்குத் திரும்பினார்கள். சிருங்கேரிக்கு வந்தபிற்பாடு ஸ்ரீமத்

ஆசார்யாரவர்களே பிரஹ்மஸூத்ர பாஷ்யம் ஆதிமுதல் கடைசிவரையில் சாந்தி புரஸ்ஸரமாக பாடம் சொன்ன தாகவும், யோகமார்க்கம் உபாஸனுமார்க்கம் இவைகளில் விசேஷ உபதேசங்கள் செய்ததாகவும் தெரிகிறது.

---

## அத்தியாயம் 3.

### பீட ஆரோஹணம்.

பெரிய ஸ்வாமிகளவர்களுக்கு வயது எண்பத்தி ரண்டு ஆகும் ஸமயம் சரீரம் மிகவும் தளர்ந்துவிட்டது. சந்திரமௌளீசுவரர் பூஜையைக்கூட சின்ன ஸ்வாமி களே செய்யும்படி ஏற்பட்டது. ஆனுல் புத்திபலமோ மனேதைர்யமோ கொஞ்சமேனும் குறையவில்லை. ஒரு நாள் ராத்திரி அவர்கள் அசர்ந்திருக்கும்போது ''கோகர் ணத்திலிருந்து நம்மை அழைத்துப்போக பிராஹ்மணர் கள் வந்திருக்கிறுர்கள். மேனுப்பல்லக்கு ஸித்தமாகட்டும்'' என்று சொன்னுர்கள். சில நிமிஷங்கள் சென்றபிறகு "மேனு ஸித்தமாய்விட்டதா? அதில் நம்மை உட்கார வையுங்கள்'' என்று சொன்னுர்கள். இதற்குப்பிறகு சுமார் ஒரு மணிநேரம் சென்று ''இதென்ன ஆச்சர்யம்! இவ்வளவு வேகமாய் நம்மை கோகர்ணத்திற்கு அழைத் துக்கொண்டு போய் திரும்பியும் வந்துவிட்டார்களே! பல்லக்கு போகிகள் நல்ல ஸாமர்த்தியசாலிகள். அவர் களுக்கு இனும் கொடுங்கள்'' என்று சொன்னுர்கள்.

இது ஸ்வப்ன பாஷணமோ என்று நினைக்கும்படி இருந்தது. மறுநாள் அதாவது பிரமாதி வருஷம் ஜ்யேஷ்ட சுத்த த்விதீயை (23-5-1879) சுக்கிரவாரம் காலை 9 மணிக்கு விதேஹ கைவல்யமடைந்துவிட்டார்கள். இவர் வார்த்தைகள் சொன்ன ஸமயத்தில் கோகர்ணத்திலுள்ள மடத்து அதிகாரி கோபால சாஸ்திரிகளுக்கு ஸ்வாமிகளவர்கள் கோகர்ணம் வந்து ஸ்ரீ மஹாபலேசுவரரை தர்சித்து கர்பூர நீராஜனம் செய்ததாக ஸ்வப்னம் ஏற்பட்டது குறிப்பிடத்தக்கது. குருநாதரின் வியோக மேற்பட்டதில் சின்ன ஸ்வாமிகள் மிகவும் துக்கத்தை யடைந்து மேல்கார்யங்களை செய்துவிட்டு அவர்களைப் பற்றியே பிரலாபித்துக்கொண்டிருக்கும் ஸமயம் குருநாதரே நேரில் வந்து "நாம் எங்கே போய்விட்டோம். இங்கேயே இருக்கிறோமே" என்று சொன்னதாக தோற்றம் ஏற்பட்டது. அதிலிருந்து பரிச்சின்ன சரீரத்திலிருந்தவர் இப்பொழுது வியாபகராயிருக்கிறாரென்று தெரிந்து ஸமாதானமடைந்தார். பிறகு சிஷ்யர்களின் வேண்டுகோளின்பேரில் வியாக்யான ஸிம்ஹாஸனத்தில் பட்டாபிஷேக மஹோத்ஸவம் நடத்தப்பட்டது.

தன் குருநாதர் ஸித்தியடைந்த தினம் முதல் அவர்கள் ஸமாதியில் பிரதிதினமும் தானே விசேஷ பக்தி சிரத்தையுடன் பூஜை செய்துவந்தார்கள். ஆசிரமத்திற்கேற்பட்ட கர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டும், ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவரர் ஆராதனங்களை செய்துகொண்டும், சிஷ்யர்களுக்கு தர்க்க வேதாந்த சாஸ்திரங்களை பாடம் சொல்லிக்கொண்டும், தானாகவே கிரந்தங்

களை பரிசீலனை செய்துகொண்டும், குருநாதரிடமிருந்து கிரஹிக்கப்பட்ட யோக மார்க்கங்களை அப்யாஸத்திற்குக் கொண்டுவந்தும், ஆனந்தமாக ஆறுவருஷம் காலங் கழித்துவந்தார்கள்.

1885 டிசம்பர் 7ல் மைஸூர் மஹாராஜா சாமராஜ பிரபுக்கள், திவான் ஸர் கே. சேஷாத்திரி அய்யர், பிரிட்டிஷ் ரெஸிடெண்டு கர்லெஸ்டு துரை முதலான பரிவாரங்களுடன் சிருங்கேரிக்கு வந்து இரண்டுநாள் தங்கி ஸ்ரீமத் ஆசார்யாரவர்களை தர்சித்தார்கள். அந்த ஸமயம் ஓர் அழகான விலையுயர்ந்த ரத்ன கிரீடத்தை ஸ்ரீ சாரதாம்பாள் ஸந்நிதியில் ஸ்ரீமத் ஆசார்யார் மஹாராஜா அவர்கள் சிரஸில் தன் கைகளாலேயே தாரணம் செய்வித்து விசேஷமாக அனுக்ரஹம் செய்தார்கள்.

---

## அத்தியாயம் 4.

### உத்தரதேச யாத்திரை.

கொஞ்சநாள் சென்று, முன்னமேயே ஸ்ரீ வித்யா சங்கராலயத்திற்கு ஸ்வர்ணத்தில் பஞ்சகலசம் செய்து கொடுத்த அண்ணா ஸாகிப் விஞ்சுருகர் என்ற ஜாகீர்தார் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகளை தர்சித்து, உத்தர தேச யாத்திரையாக விஜயம்செய்ய வேண்டுமென்று மிகவும் பிரார்த்தித்துக்கொண்டிருந்தார். ஸ்ரீமத் ஆசார்யார் வழக்கப்படி தன் குருநாதர் ஸந்நிதியிலும், ஸ்ரீசார



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், ஆஹ்நிக ஸமயம்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், ந்ருஸிம்ஹ
பர்வதத்தில்

தாம்பாள் ஸந்நிதியிலும் உத்தரவு கேட்டதில் நல்ல ஸூசனங்கள் ஏற்பட்டன. அத்துடன் தான் பிரதி தினமும் பூஜை செய்துகொண்டிருக்கிற குருநாதர் ஸமாதி லிங்கத்தின் ஆவுடையார் பீடத்தின்பேரில் யாருக்கும் தெரியாமல் ஒருநாள் ஒரு சிறு பாணலிங்கம் இருக்கக்கண்டார். ஸமாதி லிங்கத்தின் பிரதிநிதியாக இந்த லிங்கத்தை எடுத்துக்கொண்டுபோய் யாத்திரை செய்யும்படி ஆக்ஞாபித்ததாகத் தோன்றிற்று.

உடனே வேண்டிய ஏற்பாடுகளை செய்துகொண்டு, பார்த்திவ வருஷம் மாகசுக்ல பஞ்சமீ (5-2-1886) தினம் சிருங்கேரியிலிருந்து யாத்திரையாக புறப்பட்டு, ஸமீபத்திலுள்ள ஸச்சிதானந்தபுரமென்கிற அக்ரஹாரத்திற்கு விஜயம் செய்தார்கள். பிறகு சிவமொக்கா ஜில்லாவில் சிலகாலம் ஸஞ்சாரம் செய்துவிட்டு, குருநாதர் தேஹ வியோக காலத்தில் ஸங்கல்பித்த கோகர்ணயாத்திரையை செய்யவேண்டுமென்ற எண்ணத்துடன் பனவாசி, சிரஸி வழியாக கோகர்ணத்திற்கு விஜயம்செய்து ஸ்ரீ மஹாபலேசுவர ஸ்வாமியை தர்சனம் செய்து அங்குள்ள சிருங்கேரி மடத்தில் தங்கினார்கள். அப்பொழுது மஹா சிவராத்திரி தினம் மூன்றுவது யாமம் நடுநிசியில் தேவாலயம் சென்று ஸாவகாசமாக பரமானந்தத்துடன் விசேஷமாக பூஜை செய்து முக்தாஹாரம், ருத்ராக்ஷ கண்டி, வஸ்திரங்கள் முதலானவைகளை அர்ப்பணம் செய்தார்கள். இரண்டுமாஸகாலம் அங்கே தங்கிவிட்டு, பிறகு தார்வார் வழியாகச் சென்று, பம்பாய் ராஜதானியில் அநேக ஸ்தலங்களுக்கு விஜயம் செய்தார்கள்.

அந்த ஸமயம் ஜம்கண்டி ஸம்ஸ்தானத்தில் ராஜாவா யிருந்த ராமசந்திரராவ் அப்பா ஸாகெப் என்பவர் மிகவும் ஆவலுடன் ஸ்ரீ ஸ்வாமிகளவர்களை பிரார்த்தித்ததின் பேரில் 1887ஷு ஸெப்டம்பர் 16உ காலையில் உபய ஸம்ஸ் தான பிருதர்வளிகளுடன் ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் ஜம்கண் டியில் பிரவேசம் செய்தார்கள். ஊருக்கு ஒன்றரை மைலுக்கு வெளியிலேயே எதிர்கொண்டு அழைக்க வந்த ராஜா ஸ்ரீமத் ஆசார்யாரின் முதல் தர்சனத்திலேயே பர வசமாகிவிட்டார். தன் ராஜதானியில் சிலகாலம் ஸ்ரீ ஸ்வா மிகளை இருக்கச்செய்து வெகு பக்தியுடன் பூஜித்துவந் தார். சுமார் 12000 ரூபாய் விலைமதிப்புள்ள ஒரு வஜ்ர கண்டியை ஸ்வாமிகளுக்கு அர்ப்பணம் செய்தார். பிரதி வருஷமும் சிருங்கேரியில் ஸ்ரீ சாரதாம்பாள் நவராத்திரி உத்ஸவத்தில் மூலாநக்ஷத்திர தினத்தில் நடத்தப்படுகிற எல்லா செலவும் தன் ஸம்ஸ்தானத்தியதாக இருக்க வேண்டுமென்று பிரதி வருஷமும் ரூ 1000 பரம்பரையாக அனுப்பிவருவதாகக் கண்டு ஸ்ரீ ஸ்வாமிகளவர்களிடம் விக் ஞாபனப் பத்திரிகை மூலம் தெரியப்படுத்திக்கொண்டார். பின்னால் இவர் யாத்திரை மத்தியில் பல்லாரிக்கு தன் புத்திரர் ஸஹிதம் வந்து தங்க நாணயங்களால் பாத பூஜை செய்ததுடன் சிருங்கேரிக்கு வந்து வெள்ளியில் ஒரு திவ்யமான பத்ராஸனத்தையும் அர்ப்பணம்செய்து, அதில் ஏறும்போது தன் புத்திரன்பேரில் பாதஸ்பர்ச மேற்பட வேண்டுமென்று கேட்டுக்கொண்டார். அப் படியே அனுக்ரஹித்து ராஜாவுக்கும், அவர் குமாரருக் கும் ராஜார்ஹமான மரியாதை செய்து அனுப்பினார்கள்.

ஜம்கண்டியிலிருந்து புறப்பட்டு மீராஜ், சாங்கலி, குருந்துவாட முதலான ஸம்ஸ்தான அரசர்களின் பிரார்த்தனைக்கிணங்கி, அங்கங்கே ராஜாக்களுக்கும், பிரஜைகளுக்கும் அனுக்ரஹம் செய்துகொண்டு கொல்லாபுரம் போய் மஹாலக்ஷ்மீ தர்சனம் செய்துகொண்டு அவ்வூரிலிருக்கும் சங்கேசுவரமடம் ஸ்வாமிகளால் அழைக்கப்பட்டு அம்மடத்திற்கு விஜயம்செய்து விசேஷ ஸத்காரத்தையடைந்து அனுக்ரஹம் செய்தார்கள். கொல்லாபுரத்தில் வாஸம்செய்யும்போது அநேகமாய் தினந்தோறும் ஸம்ஸ்கிருத பாஷையிலேயே உபந்யாஸம் செய்து சிஷ்யமண்டலிக்கு அனுக்ரஹம் செய்தார்கள். அந்த தேசத்திய ஜனங்களின் பக்திவிச்வாஸங்களைக் கண்டு மிகவும் ஸந்தோஷித்தார்கள்.

புனு ஸமீபம் வரையில் போனதில் தனக்கேற்பட்ட ஆசாரத்திற்கு வேண்டிய வசதிகள் மிகவும் குறைகிறதென்று தெரிந்துகொண்டு உத்தரதேச யாத்திரையை நிறுத்திக்கொண்டு சோலாப்பூர், பீஜப்பூர் மார்க்கமாகத் திரும்பிவிட்டார்கள். ஸொண்டூர் வழியாக பல்லாரிக்கு விஜயம்செய்தார்கள். அந்தக்காலத்தில் லிங்காயத்தார் ஆர்பாட்டம் ஜாஸ்தியாயிருந்தபடியால் ஏதேனும் கலவரமேற்படுமென்று ஜனங்களும் ஸர்க்காரும் எதிர்பார்த்து வேண்டிய ஏற்பாடுகள் செய்திருந்தார்கள். ஆனால் இவர் தனக்கு ஏற்பட்ட பிருதாவளியுடன் பட்டணத்தில் பிரவேசித்தவுடனேயே இவரை தர்சனம் செய்த ஒவ்வொருவர் மனத்திலும் இவருடைய சாந்தமான ஸ்வபாவம் பிரதிபலித்து, துவேஷபாவனை போனவிடம் தெரி

யாமல் எல்லா ஜனங்களும் ஒரேவிதமாக ஆனந்தக்கடலில் ஆழ்ந்தார்கள். அந்த ஊரிலேயே சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் செய்து இரண்டு மாஸத்திற்குமேல் தங்கினார்கள். அங்கே மைசூர் திவான் ஸர் கே. சேஷாத்திரி அய்யர் வந்து ஸூத்ரபாஷ்ய சாந்திசெய்துகொண்டு விசேஷ அனுக்ரஹத்துடன் திரும்பினர்.

பல்லாரியிலிருந்து புறப்பட்டு பௌகுப்பே என்ற கிராமத்தில் வந்து இறங்கின ராத்திரியிலேயே இவர்கள் ஜாகையில் திருடர்கள் பிரவேசித்து ஸ்ரீ சந்திர மௌளீசுவரர், ரத்னகர்ப்ப கணபதி, இவைகள் வைத்திருந்த சின்ன தாமிரப் பெட்டி, சில ருத்ராக்ஷ கண்டிகள், வெள்ளிப் பாத்திரங்கள், வலமுறி சங்கம், ஸ்வர்ண கணபதி முதலிய பதார்த்தங்களை எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். காலையில் இந்த ஸமாசாரம் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காதில் விழுந்தவுடன், யாரிடமும் பேசாமல் ஸ்நாநம் செய்துவிட்டு ஈரவஸ்திரத்துடன் ஆஸனத்தில் அமர்ந்து நரஸிம்ஹ மந்திர ஜபம் செய்ய ஆரம்பித்துவிட்டார்கள். கிரமப்படி கலெக்டர் முதலான அதிகாரிகளுக்கு தெரிவிக்கப்பட்டது. ஆனால் மடத்தில் மேல் என்ன நடக்கவேண்டும், பூஜாதிகள் நடக்கவேண்டியது எப்படி, போஜனாதி வியவஹாரங்கள் நடப்பது எப்படி என்று யாரும் சொல்லமுடியாமல் பிரமித்து நின்றார்கள். யானை, குதிரை, மாடு, கன்று முதலான ஜந்துக்கள்கூட ஆஹாரம் எடுத்துக்கொள்ளாமல் நின்றன. ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் பீடத்தில் காலை 6-மணிக்கு உட்கார்ந்தவர் ராத்திரி 10-மணிக்குத் தானாகவே எழுந்து மறுபடியும்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள் திவான் சேஷாத்ரி அய்யருடன்

ஸ்நாகம் செய்து உட்கார்ந்துவிட்டார்கள். மூன்றுவது நாள் ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்து ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் அனுக்ரஹம் பெற்று தேடிவருவதாகச் சென்ருர். ஐந்தாவது தினம் மத்தியானம் 12-மணிக்கு மூன்று நான்கு மைல் தூரத்தில் ஒரு வயலில் உழும்போது ஒரு சிறிய தாமிரப்பெட்டி கிடைத்ததாக ஸமாசாரம் வந்து உடனே இன்ஸ்பெக்டர் போய் வாஸ்தவம் தான் என்று தெரிந்து மடத்திற்குச் சொல்லியனுப்பினர். அப்பொழுதுதான் மடத்திலுள்ள யாவருக்கும் போயிருந்த பிராணன் திரும்பி வந்தாற்போலாயிற்று. உடனே ஸ்ரீமடத்திலிருந்து பல்லக்கு பிருதாவளிகளுடன் ஆபாலவிருத்தர் எல்லா ஜனங்களும் அந்த இடத்திற்கு ஓடினர்கள். வெய்யில் ஸஹிக்க முடியாமல் இருந்தும் ஜனங்கள் லக்ஷியம் செய்யாமல் அந்த நான்கு மைல் தூரமும் நடந்து சென்ருர்கள். அங்கே பெட்டியுடன் இன்ஸ்பெக்டர் நிற்கக் கண்டார்கள். திறந்து பார்த்ததில் ஸ்ரீ சந்திரமௌளீசுவரர், ரத்னகர்ப்ப கணபதி, வலமுறிசங்கம் இவைகள் மாத்திரம் இருந்தன. இவைகளை ஜனங்கள் பார்த்த க்ஷணமே எங்கிருந்தோ திடீரென்று மழைபெய்யவாரம்பித்தது. மழையிலேயே நனைந்துகொண்டு சுமார் 5-மணிக்கு ஸ்ரீமடம் வந்துசேர்ந்தார்கள். மடத்தில் பிரவேசித்த க்ஷணத்திலேயே மழையும் நின்று எல்லாருக்கும் ஆச்சர்யத்தை உண்டுபண்ணிற்று. ஸ்ரீஸ்வாமிகள் ஸந்நிதியில் இப்பெட்டியைவைத்தவுடன் அவர்கள் கொஞ்சநேரம் பரவசமாய் ஸ்தம்பித்து கண்களில் தாரை தாரையாய் ஜலப்ரவாஹமேற்பட்டது. சில நிமிஷங்கள்சென்று

அந்த இன்ஸ்பெக்டரைத் தன் ஸமீபத்தில் அழைத்து தன் அமிருதமயமான கரங்களால் ஆலிங்கனம் செய்து கொண்டு, தன் ஹஸ்தத்தை அவர் சிரஸில் வைத்து பரமானுக்ரஹம் செய்தார்கள். ஸீதையைக் கண்டு விட்டு வந்த ஹனுமாருக்கும் ஸ்ரீராமசந்திரன் இவ்விதமே யல்லவா பரிஷ்வங்கம் என்கிற மஹத்தான ஸன்மானத்தைச் செய்தார்? சூர்யாஸ்தமன சமயமாகி விட்டபடியால் ஸ்ரீஸ்வாமிகள் ஸ்நாநம் செய்து அன்று ஸ்ரீ சந்திரமௌளீசுவரர் பூஜைக்கு உட்கார்ந்தவர் மறுநாள் விடியற்காலம் 6-மணிக்குத்தான் பூஜையை முடித்தார்கள். ஸ்ரீமத் சங்கரபகவத் பாதாசார்யாரவர்கள் காசியிலிருக்கும்போது விசுவேசுவரரே கைலாசத்திலிருந்து ஐந்து லிங்கங்கள் கொண்டுவந்து கொடுத்ததாகவும், அவைகளில் ஒன்றை சிதம்பர க்ஷேத்திரத்தில் வைத்துவிட்டு, மற்ற நான்கையும் தன்னால் நான்கு திக்குகளிலும் ஏற்படுத்தப்பட்ட சிருங்கேரி, துவாரகா, பதரீ, ஜகந்நாதம் என்று சொல்கிற சதுராம்நாய பீடங்களில் பூஜை செய்யும்படி தன் சிஷ்யர்களுக்கு ஆக்ஞை செய்ததாகவும் தெரிகிறது. இந்த சந்திரமௌளீசுவர லிங்கம் ஸ்படிகமில்லையென்றும், இது ஒரு ரத்ன விசேஷமென்றும் தெரியவருகிறது. இதன் சிரஸ்ஸில் பிரகாசிக்கும் சந்திரனுடைய காந்தியும் ஆச்சர்யகரமாயிருக்கும். ஆதி ஆசார்யார் முதல் இதுவரை பூஜிக்கப்பட்டு வந்த அமானுஷமான மூர்த்திகள் மறைந்தால் அதனால் யாவருக்கும் மஹத்தான விபத்தே யுண்டாகுமல்லவா? அதனாலேயே இவ்வளவு கடோரமாக தபஸ்செய்து இம்மூர்த்திகளை ஸ்ரீமத் ஆசார்யார்

திரும்பப்பெற்று லோகத்திற்கு க்ஷேமத்தைச் செய்து வைத்தார்கள். இந்த ஸம்பவம் ஏற்பட்டதும் உடனே சிருங்கேரிக்குத் திரும்பி தன் குருநாதர் அதிஷ்டானத்தில் இம்மூர்த்திகளை ஒப்புவித்துவிட்டுத் தான் மேல் கார்யம் கவனிக்க வேண்டுமென்று தோன்றி வெகுவேகமாக பிரயாணம் செய்து சிருங்கேரிக்குத் திரும்பிவந்து சேர்ந்தார்கள்.

---

## அத்தியாயம் 5.

### ராமேசுவர யாத்திரை.

சிருங்கேரிக்குத் திரும்பிவந்தபிறகு இரண்டு வருஷ காலம் அங்கேயே வித்யார்த்திகளுக்கு பாடம் சொல்வதிலும், தானாக கிரந்தங்களை பரிசீலனம் செய்வதிலும், பூஜை, ஜபம், தியானாதிகள் செய்வதிலுமாக ஆனந்தமாகவிருந்தார்கள். அதன்பிறகு ஸ்ரீ சாரதாம்பாள் பிரேரணையால் தக்ஷிணதேச யாத்திரை போகவேண்டுமென்ற ஸங்கல்பம் ஏற்பட்டது. அந்த சமயம் மைசூர் மஹாராஜா சாமராஜ பிரபுக்களும், தன் ராஜதானிக்கு விஜயமாகி தன்னையும் தன் குடும்பஸ்தர்களையும் அனுக்ரஹிக்க வேண்டுமென்று விக்ஞாபன பத்திரிகைமூலமாய் பிரார்த்தித்தார்கள். அப்படியே கரஹூ ஜ்யேஷ்ட பகுள பஞ்சமீ (26-6-1891) சுக்கிரவாரம் சிருங்கேரியிலிருந்து புறப்பட்டு ருஷ்யசிருங்காச்ரமமான 'கிக்க' என்ற அக்ரஹாரத்திற்கு விஜயமானார்கள். அங்கிருந்து சிக்கமக

ளூர், பேலூர், ஹாஸன் மார்க்கமாக மைசூர் ராஜதானியில் பிரவேசம் செய்தார்கள். முந்தின ஸம்பிரதாயத்தை யனுசரித்து விசேஷ மரியாதையுடன் மஹாராஜா ஸ்ரீமத் ஆசார்யாரை வரவேற்று அரண்மனையில் தூளிபாத பூஜைசெய்து ராஜபுத்ரீ புத்திரர்களுக்கு ஸ்ரீஸ்வாமிகளின் தரிசனம் செய்வித்து அவர்களுடைய விசேஷ அனுக்ரஹத்திற்கு பாத்திரரானார்கள். ராஜபுத்ரீ புத்திரர்களுக்கு ஸ்ரீ சாரதாம்பாள் பிரஸாத ரூபமாக ரத்னாபரணங்கள் கொடுக்கப்பட்டன. ஸ்ரீஸ்வாமிகள் இறங்கியிருந்த நஞ்சராஜ பகதூர் சத்திரத்திலேயே சாதுர்மாஸ்ய ஸங்கல்பம், வியாஸ பூஜை, நவராத்திரி மஹோத்ஸவம் இவைகளை நடத்தினார்கள். சாதுர்மாஸ்ய இரண்டு மாஸத்தில் ஏற்படும் செலவு முழுவதையும் அரண்மனையிலிருந்தே நிர்வஹித்தார்கள். மேலால் இரண்டு மாஸம் சிஷ்ய மண்டலிகள் ஸத்கரித்தார்கள்.

அங்கே இருக்கும்போது ஸம்ஸ்தான வழக்கப்படி பாத்ரபத மாஸத்தில் கணபதி சபை அதிவிமரிசையாக நடந்தது. அக்காலத்தில் பிரஸித்தர்களான பண்டித ரத்னம் ஸீதாராம சாஸ்திரிகள், பண்டித ரத்னம் கஸ்தூரி ரங்காசார்யார், தர்மாதிகாரி காசி ராம சாஸ்திரிகள், தர்மாதிகாரி கும்பகோணம் சேஷாசார்யார், பழமநேரி ஸுந்தர சாஸ்திரிகள், நாமகுண்டுலு சாமாசார்யார், விபாகம் ஸ்ரீகண்ட சாஸ்திரிகள் முதலானவர்கள் தர்க்க வியாகரண வேதாந்தாதி சாஸ்திரங்களில் தேர்ந்த ஞானமுள்ளவர்களாக இருந்து ஆஸ்தான வித்வான்களாகவுமிருந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்களும் பிரதிதினமும்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள் திவான் மாதவராயருடன்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள்,
ஸ்ரீகண்ட சாஸ்திரிகளுடன்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், ஸன்யாஸிகளுடன்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், ஊர்வலம்



ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், ஸிம்ஹாஸனத்தில்

ஸபையையலங்கரித்து சாஸ்திரவியவஹாரங்களில் தானும் கலந்துகொண்டு உத்ஸாஹமாக ஆத்யக்ஷயம் வஹித்தார்கள். இந்த சோபையைக் கண்டு ஆனந்திக்க வேண்டுமென்று மஹாராஜா அவர்களும் ஒருநாள் ஸபைக்கு வந்து பண்டிதர்களை உத்ஸாஹப் படுத்தினார்கள். அநேகம் லௌகிகர்களும் வந்து தங்கள் சந்தேஹங்களைச் சொல்வார்கள். அவரவர்களுக்குத் தக்கபடி விக்ரஹாராதனம், ஜாதி வியவஸ்தை, வேதப்ராமாண்யம், அவதார ரஹஸ்யம், பாலிகா விவாஹம், ஸமுத்ர யானம், நவீன வித்யாப்யாஸம் முதலான விஷயங்களைக் குறித்து உண்டாயிருந்த சந்தேஹங்களை நிவிருத்திசெய்து நம்பிக்கையும் தைவபக்தியும் அதிகமாகும்படி செய்துவந்தார்கள். இவ்விதமாக சுமார் நான்கு மாதகாலம் மைசூரில் தங்கிவிட்டு, ஸ்ரீமத் ஆசார்யாரவர்கள் ஒருநாள் காலையில் திவான் ஸர் கே. சேஷாத்திரி அய்யரவர்கள் கிருஹத்தில் ஆஹ்நிகங்களை முடித்துக்கொண்டு ஸகல ராஜ மரியாதைகளுடன் அரண்மனைக்கு விஜயம்செய்து, மஹாராஜாவுக்கும் ராஜ குடும்பத்தார்களுக்கும் வஸ்திராதி ஸம்மானங்களாலும் பல மந்திராக்ஷதை முதலான பிரஸாதங்களாலும் அனுக்ரஹித்துவிட்டு, அங்கிருந்து புறப்பட்டு நஞ்சன் கூடுக்கு சமீபத்திலுள்ள சிக்கய்யன் சத்திரம் என்ற ஸ்தலத்திலுள்ள சிவாலயத்தில் அன்று தங்கினார்கள். மறுநாள் நஞ்சன்கூடு என்கிற கரளபுரிக்கு விஜயம்செய்து பிரஸன்ன பார்வதீ ஸமேத ஸ்ரீ கண்டேசுவரரை ஆராதனம் செய்துகொண்டு அந்த க்ஷேத்திரத்தில் இருபத்திரண்டு நாள் வாசம் செய்தார்கள். அங்கிருந்து புறப்பட்டு

சாமராஜநகரம், குண்டலபேட்டை, ஹெக்கடதேவன் பேட்டை, எடத்துரை, ஹுணசூர், அரகல்கூடு, மட கேரி, பாகமண்டலம் மார்க்கமாக காவேரி உத்பத்தி ஸ்தானமான தலைக்காவேரிக்குப் போய் ஸ்நாநம் செய்து தங்க நாணயங்களால் காவேரி அம்மனை பூஜைசெய்து விசேஷமாக பிராஹ்மண ஸந்தர்ப்பணாதிகள் செய்துவைத் தார்கள். அங்கிருந்து யாத்திரைக் கிரமமாக பச்சிம வாஹினீ வந்து, தன் குருநாதருடைய ஆராதனையை நடத் தினார்கள். அங்கு மஹாராஜா சாமராஜ பிரபுக்கள் வந்து தர்சனம்செய்து திரும்பினார்கள். பச்சிமவாஹினீ யிலிருந்து மண்டயம், மத்தூர், சிவசமுத்திரம், கொள் ளேகாலம், சாமராஜ நகரம் மார்க்கமாக கணவாய் இறங்கி சத்தியமங்கலம் வந்து, அங்குள்ள தன் மடத்திலேயே சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் நடத்தினார்கள். சாதுர்மாஸ்யம் பூர்த்தியானவுடன் கோபிசெட்டிப்பாளையம் போய் அங்கு நவராத்திரி மஹோத்ஸவத்தை நடத்தினார்கள். அவ் வூரில் சிவக்கொழுந்து முதலியார் என்றதோர் பக்தரால் பிரார்த்திக்கப்பட்டு அவரால் ஏற்படுத்தப்பட்ட தேவா லயத்தில் வைதிக ரீதியாய் ஸ்ரீஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியை பிரதிஷ்டை செய்வித்து தானும் நேரில் விஜயம்செய்து விசேஷமாக ஸாந்நித்யம் ஏற்படும்படி செய்தார்கள்.

அங்கிருந்து புறப்பட்டு பவானி, ஈரோடு, கரூர் முத லிய கிராமங்களில் அங்கங்குள்ள ஜனங்களின் பிரார்த் தனைக்கு இணங்கி சஞ்சாரம்செய்துகொண்டு வந்ததில், திருச்சிராப்பள்ளி ஜில்லா அய்யம்பாளையத்திலுள்ள மிக வும் ஆஸ்திகரும் தனிகருமான தாண்டவராய பிள்ளையின்

வேண்டுகோளுக்கு இணங்கி அவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். அங்கே போய்ச் சேர்ந்த மறுநாள் அந்த பக்தர் தண்டாயுதபாணியான ஸுப்ரஹ்மண்யருக்கு விசாலமாக ஓர் ஆலயம் கட்ட உத்தேசிப்பதாகவும், அதற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்களே அஸ்திவாரக் கல் நட்டு அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார். அப்படியே விஜய வருஷம் சைத்ர சுக்ல சப்தமியில் (24-3-1893) நித்யாஹ்னிகம் பூஜாதிகளை முடித்துக்கொண்டு அந்த ஸ்தலத்திற்குப்போய் ஸம்ஸ்தானச் செலவிலேயே கணபதி பூஜை முதலான கார்யங்களை பிராஹ்மணர்கள் மூலமாக நடத்தி அபிஜிந்முஹூர்த்தத்தில் அஸ்திவாரச் சிலையை ஸ்தாபனம் செய்தார்கள். ஏற்படும் ஆலயத்தில் விஷ்ணு மூர்த்தியையும், பார்வதீ பரமேசுவர மூர்த்திகளையும் கூட பிரதிஷ்டை செய்யும்படிக்கும் தாம் ஸேது யாத்திரை செய்து திரும்புவதற்குள் பிரதிஷ்டை செய்வதற்கு வேண்டிய அனுகூலங்களை ஸித்தப்படுத்தும்படிக்கும் ஆக்ஞை செய்தார்கள்.

அங்கிருந்து புறப்பட்டு கோயமுத்தூர் ஜில்லா கொழுமம் என்ற வரதராஜபுரம் போய் அங்கே அவ்வருஷ சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை நடத்தினார்கள். பிறகு சமீபத்திலுள்ள கடத்தூர் என்ற அக்ரஹாரத்தில் நவராத்ரி உத்ஸவத்தை நடத்திவிட்டு ஸுப்ரஹ்மண்ய க்ஷேத்திரமாகிய பழனீ வந்தார்கள். அங்கு சிலநாள் வாசம்செய்து தன் கையினால் தண்டாயுதபாணிக்கு விசேஷ பூஜைகள் செய்து, அங்கிருந்து திண்டுக்கல் மார்க்கமாக மதுரைக்கு விஜயம் செய்தார்கள். முன் வழக்கத்தை யனுசரித்து

ஸ்ரீ மீனாக்ஷீசுந்தரேசுவரர் ஆலயத்தில் கல்யாண மண்டபத்தில் ஜாகை வைத்துக்கொண்டார்கள். ராமனாதபுரம் ஜமீன்தாரான பாஸ்கர ஸேதுபதியவர்கள் மதுரைக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களை புஷ்பங்களால் அழகாக அலங்கரிக்கப்பட்ட தங்கப் பல்லக்கில் ஆரோஹணம் செய்வித்து மஹாவிபவத்துடன் உத்ஸவம் நடத்தி ஆபால விருத்தர்கள் தர்சனம் செய்து ஆனந்திக்கும்படி செய்தார்கள். அப்படியே ஸேது யாத்திரையை முடித்துக்கொண்டு ராமனாதபுரம் வந்து தன்னை அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அப்படியே ராமனாதபுரம் ஸம்ஸ்தான எல்லையில் பிரவேசம் செய்தது முதல் வேண்டிய ஸௌகர்யங்கள் யாவற்றையும் அந்த ராஜனே செய்துகொடுத்தார். தனுஷ்கோடி சென்று அங்கே மூன்றுநாள் தங்கி ஸேது ஸ்நாநம், ஸம்ஸ்தான வழக்கப்படி ஏற்பட்ட இதர தான தர்மங்கள் எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு ராமேசுவரம் வந்து அங்கு ஸ்ரீ ராமநாத ஸ்வாமிக்கு தாமே விசேஷமாக பூஜைசெய்து அங்குள்ள சிஷ்யர்களுக்கு அனுக்ரஹம் செய்துவிட்டு ஸேதுபதியின் பிரார்த்தனைப் பிரகாரம் ராமனாதபுரம் வந்து அங்கேயே சாதுர்மாஸ்ய ஸங்கல்பம், நவராத்திரி உத்ஸவம் இவைகளை நடத்தினார்கள்.

ராமனாதபுரம் ஸம்ஸ்தானத்தில் வெகுநாளாக ராஜராஜேசுவரி ஆலயமேற்பட்டு நவராத்திரியில் ஒரு தினம் ஸஹஸ்ர பூஜை என்ற பெயரால் ஆயிரம் ஜீவஜந்துக்களை பலிகொடுக்கிறதென்ற வழக்கமிருந்து வந்தது. இதை மாற்றவேண்டுமென்று ஸேதுபதியவர்களுக்குத்

தோன்றி ஸ்ரீமத் ஆசார்யாரவர்களிடம் கேட்டதில் மறு நாள் பதில்சொல்வதாகச் சொல்லிவிட்டார்கள். அன்றிரவு ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு ஸ்வப்னத்தில் ஒரு பிராஹ்மணியல்லாத ஸ்திரீ தன் ஒரு கையில் மத்யபாத்திரமும் மற்றொன்றில் துடப்பமும் வைத்துக்கொண்டு அழுக்கடைந்த வஸ்திரத்துடன் தோன்றி "போகிறேன்" என்று சொன்னதாகவும், சிலநிமிஷங்கள் கழித்து ஸர்வாலங்கார பூஷிதையாய் ஒரு பிராஹ்மண ஸுமங்கலி "வந்தேன்" என்று சொன்னதாகவும் தோன்றிற்று. இதையே அம்பிகையின் உத்தரவு என்று தீர்மானித்து மறுநாள் ராஜரிடம் சொன்னார்கள். அதன்பேரில் மடத்து வித்வான்களை அனுப்பி ராஜராஜேச்வரி மூர்த்தியின் கலாகர்ஷணம் செய்வித்து வேதோக்தவிதானப்படி ஸ்ரீ சக்ர யந்திரத்தை ஸ்தாபித்து ராஜ ராஜேச்வரி அம்மனுக்கு சரப்பிரதிஷ்டை செய்வித்து தாமே அங்கு விஜயம்செய்து பூஜைசெய்தார்கள். அவ்வாலயத்திற்குத் தனியாக ஆவரணம் கல்பித்து நித்ய பூஜாதிகளுக்காக வருஷம் ஒன்றுக்கு பன்னிரண்டாயிரம் ரூபாய் வருமானமுள்ளதொரு கிராமத்தையும் ராஜனால் கொடுப்பித்து, அங்கே பூஜைக்காக மடத்திலிருந்தே இரண்டு பிராஹ்மணர்களை நியமித்து, ராஜனுக்கும் பிரஜைகளுக்கும் விசேஷ அனுக்ரஹத்தைச் செய்தார்கள். அந்த ராஜன் மிகவும் உதாரியாயிருந்தபடியால் மிகவும் கடன்பட்டு பின் வாரிசுகளுக்கு ஸம்ஸ்தானம் தக்காதென்று தோன்றக்கூடிய நிலையிலிருந்த விஷயத்தை ஸ்ரீ ஸ்வாமிகள் தெரிந்துகொண்டு ராஜனிடம் அவர் ராஜ்யத்தை தனக்கு குரு



தக்ஷிணையாகக் கொடுக்கவேண்டுமென்று கேட்டார்கள். உடனே வெகு சந்தோஷத்துடன் அந்த ராஜனும் அப்படியே அர்ப்பணம் செய்துவிட்டார். மறுதினம் அரண்மனையில் தர்பார் கூட்டி, அதற்கு சகல பரிவாரங்களுடன் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம்செய்து அந்த சபையில் ராஜகுமாரரான ராஜேசுவர முத்துராமலிங்க ஸேதுபதியை வரவழைத்து, நேற்று ராஜன் தனக்கு குருதக்ஷிணையாகக் கொடுத்த ராஜ்யத்தை தான் அநுக்ரஹ புரஸ்ஸரமாக ராஜகுமாரருக்கு கொடுத்திருப்பதாகச் சொன்னார்கள்.

இவ்விதம் அந்த ஸம்ஸ்தானத்தை ரக்ஷித்துக் கொடுத்தார்கள். ராஜனுடைய நிர்பந்தத்திற்கு கட்டுப்பட்டு ஐந்து கிராமங்களை மாத்திரம் ஸ்ரீமடத்தில் வைத்துக்கொள்ள ஸம்மதித்தார்கள். பாஸ்கர ஸேதுபதியவர்களுக்கு ரத்னமயமான சிரோபூஷணம் கொடுத்து அவரையும் அவர் குடும்பத்தார்களையும் விசேஷமாக அநுக்ரஹித்துவிட்டு அங்கிருந்து புறப்பட்டார்கள்.

அங்கிருந்து கோவிலூர் வந்து தங்கின சமயம் மைசூர் மஹாராஜா சாமராஜ பிரபுக்கள் கல்கத்தா போயிருந்த இடத்தில் காலகதியடைந்துவிட்டார் என்கிற சமாசாரம் தெரிந்தது. பிறகு திருநெல்வேலி ஜில்லாவில் பிரவேசம்செய்து அங்கங்கு கிராமங்களில் சிஷ்யர்களுக்கு அநுக்ரஹம் செய்துகொண்டு ஜய வருஷம் (1895) மாக பகுள த்விதீயையன்று திருநெல்வேலிக்கு சமீபத்திலுள்ள தாம்ரபர்ணீ நதீ தீரத்தில் இருக்கும் ஸந்த்யாமண்டபத்திற்கு வந்தார்கள். அங்கு ஆயிரக்

கணக்கான பிராஹ்மணர்கள் கூடியிருந்தார்கள். நதி தீரத்திலேயே ஸ்வர்ணப் பல்லக்கில் ஸ்ரீ ஸ்வாமிகளை ஆரோஹணம் செய்வித்து பிராஹ்மணர்களே பல்லக்கைத் தூக்கிக்கொண்டு வாத்ய கோஷங்களுடனும், வேத கோஷங்களுடனும், மங்களார்த்திகளுடனும் மிக உத்ஸாஹத்துடன் எல்லா வீதிகளிலும் உத்ஸவம் நடத்தி திருநெல்வேலியிலுள்ள சாலிவாடீசுவரர் தேவஸ்தானத்தில் வஸதி செய்வித்தார்கள். பக்கத்து கிராமங்களிலுள்ளவர்களும் அங்கேயே தர்சனத்திற்கு வரவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டது. அப்படியே கொஞ்சநாளிருந்து சிஷ்யர்களை அனுக்ரஹித்துவிட்டு தாம்ரபர்ணீ நதியின் மூலஸ்தானமான பாணதீர்த்தத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்த ஸ்தலம் சிங்கம்பட்டி ஜமீன்தாரின் ஸ்வாதீனத்திலிருந்தபடியால் அவரே வேண்டிய அனுகூலங்களை செய்துகொடுத்தார்கள். அவருக்கு "தீர்த்தபதி" என்ற பிருதும் கொடுத்து புத்திர ஸந்தானமேற்படும்படி அனுக்ரஹித்தார்கள். அங்கிருந்து அதிவேகமாகவே யாத்திரையை நடத்திக்கொண்டு அய்யம்பாளையம் வந்து சேர்ந்தார்கள். அந்த மன்மத வருஷம் சைத்ர பகுள தசமி (19-4-1895) சுக்கிரவாரத்தன்று ஸ்ரீமத் ஆசார்யார் ஆக்ஞைப்படி தண்டாயுதபாணி ஸுப்ரஹ்மண்யர், பிரஸன்ன பார்வதீ ஸமேத பிரஸன்ன பரமேசுவரர், ஸ்ரீநிவாஸர் இவர்களுடைய மூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்பட்டன. பிரதிஷ்டையானவுடன் ஸ்ரீஸ்வாமிகளவர்களே தேவாலயம் சென்று விசேஷ பூஜைகள் செய்து பக்தசிகாமணியான தாண்டவராய பிள்ளைக்கும் மற்றும் கூடி

யிருந்த சிஷ்யர்களுக்கும் தீர்த்தம் முதலான பிரஸாதம் கொடுத்து அனுக்ரஹித்தார்கள்.

அங்கிருந்து புறப்பட்டு சேலம் ஜில்லா வழியாக கணவாய் ஏறி ஹோசூர், ஆனேக்கல் மார்க்கமாக பங்களூர் வந்து சேர்ந்தார்கள். அங்கு திவான் ஸர் கே. சேஷாத்திரி அய்யர் முதலான அதிகாரிகள் வந்திருந்து சகலவித ராஜ மரியாதைகளுடன் வரவேற்றார்கள். அங்கு ஒருவாரம் தங்கிவிட்டு சாமராஜ பிரபுக்களின் பட்டமஹிஷீ வாணீ விலாஸ சந்நிதான கெம்ப நஞ்சம்மண்ணியவர்களின் பிரார்த்தனையின்பேரில் மைசூருக்கு வந்து, மஹாராணியவர்களுக்கும் ராஜ புத்ரர்களுக்கும் தர்சனம் கொடுத்து அநேகவிதமான தர்மோபதேசங்களினால் அவர்களை ஸமாதானப்படுத்தினார்கள். அங்கிருந்து பச்சிமவாஹினீ, கிருஷ்ணராஜபேட்டை வழியாக ஆஷாட சுக்ல சப்தமி (29-6-1895) ஸ்திரவாரம் சிருங்கேரியில் பிரவேசம் செய்தார்கள்.

---

## அத்தியாயம் 6.

### ஏகாந்தவாஸம்.

சிருங்கேரிக்கு ஸ்ரீமத் ஆசார்யார் திரும்பி வந்தவுடன் இந்த நான்கு வருஷகாலம் சஞ்சாரம் செய்ததில், ஜனங்களிடம் வெகு வேகமாய்க் குறைந்துகொண்டு வருகிற ஆஸ்திக்யபுத்தியையும் அனுஷ்டானங்களையும், ஜாஸ்தி

யாகிக்கொண்டு வருகிற நாஸ்திக்யத்தையும், துராசாரங்களையும் நினைத்து நினைத்து இவைகளுக்கு ஏதேனும் பரிஹாரம் செய்யவேண்டுமென்று தோன்றினும் அது ஸபலமாகுமாவென்ற சந்தேஹமும் தோன்றி மனது மிகவும் சஞ்சலப்பட்டுக்கொண்டிருந்தது. பிறகு தன்னாலாகக்கூடிய பிரவிருத்தியை செய்யவேண்டுமென்றும், பாக்கியெல்லாம் பகவத் ஸங்கல்பம்போல் நடக்குமென்றும் ஸமாதானப்படுத்திக்கொண்டு சிருங்கேரியிலேயே மன்மத வருஷம் சிராவண சுக்ல ஷஷ்டி தினம் (27-7-1895) ஸ்ரீ சாரதாம்பாளுக்கு விசேஷ பூஜைகள் செய்து, வேத சாஸ்திர அத்யயனத்திற்காக "ஸத்வித்யா ஸஞ்ஜீவினீ" என்ற பெயருடன் ஒரு பாடசாலையை ஆரம்பித்தார்கள். அதற்கு வேண்டிய உபாத்யாயர்களையும் வித்யார்த்திகளையும் ஸங்கிரஹம் செய்தார்கள். தானும் அதிகார ஸம்பன்னர்களான சிலர்களுக்கு வேதாந்த சாஸ்திர பாடம் சொல்லவாரம்பித்தார்கள். அதிக உத்ஸாஹத்துடன் பிரஹ்மஸூத்ரம், உபநிஷத்துக்கள், பகவத்கீதை என்ற ப்ரஸ்தானத்ரயத்தின் பாஷ்யங்களையும் மூன்று வருஷ காலத்தில் பூர்த்தியாக பாடம் சொன்னார்கள்.

அதன்பிறகு ஏகாந்தவாஸத்தில் ருசி ஜாஸ்தியாக ஏற்பட்டதின்பேரில் சிருங்கேரியில் துங்கா நதிக்குத் தென்பக்கம் துஷ்ட மிருகங்கள் சஞ்சரிக்கக்கூடியதாக விருந்த அரண்யத்தை சீர்திருத்தி தபோவனமாகச்செய்து அதற்குத் தன் குருநாதர் பெயரால் "நரஸிம்ஹ வனம்" என்று பெயரிட்டு அதிலேயே ஒரு பர்ணசாலை ஏற்படுத்திக்கொண்டு அதற்கு விகாரி வருஷம் ஆசுவயுஜ பகுள பஞ்

சமீ (24-9-1899) காலையில் விஜயம் செய்தார்கள். ஸம்ஸ்தானத்திற்கேற்பட்ட ராஜ சின்னங்களையும், தங்கப், வெள்ளிமுதலிய பாத்திரவர்க்கங்களையும் உபயோகிப்பதை நிறுத்திவிட்டார்கள். சாயங்காலம் அரண்யத்திற்குள் பிரவேசித்து உசிதமான ஸ்தலத்தில் நிர்குணத்யானத்திலிருந்து ஆத்மானந்தத்தையடைந்து வந்தார்கள். ஆனால் கிரமப்படி பூஜைகளோ, பாடப்ரவசனமோ நடந்தே வந்தன.

இப்படியிருக்கும் சமயம் மைசூர் மஹாராஜா நால்வடி கிருஷ்ணராஜ பிரபுக்கள் தன் வித்யாப்யாஸ அதிகாரியான பிரேசர் என்ற ஐரோப்பியருடன் சிருங்கேரிக்கு விஜயம்செய்து ஸ்ரீமடம் அதிகாரிகளால் விசேஷ மரியாதைகளுடன் வரவேற்கப்பட்டார். அவர்களும் நரஸிம்ஹவனத்திலேயே ஆசார்யாரவர்களை தர்சித்தார்கள். அவர்களுடன் வந்திருந்த பிரேசர் என்பவருக்கு ஸ்ரீஸ்வாமிகளுடன் ஏகாந்தமாய் ஸம்பாஷணை செய்ய வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டது. அதற்கு ஸ்ரீஸ்வாமிகளும் அனுமதித்து சாயங்காலம் நான்கு மணிமுதல் எட்டு மணிவரையில் பேசிக்கொண்டிருந்தார்கள். அநேகமாய் உலக வியவஹாரங்களிலேயே ருசியும் பரிசயமுமுள்ள இவருடைய மனதைக் கவர்ந்துகொண்ட ஆசார்யாரிடம் இவருக்கு ஏற்பட்ட மரியாதைக்கும் பக்திக்கும் அளவேயில்லை. தன் மனோபாவத்தைக் கண்டு அவர் பின்னால் ஸ்ரீமடத்திற்கு எழுதியிருப்பதிலிருந்து எவ்வளவுதூரம் ஈடுபட்டாரென்பது நன்கு தெரிகிறது. மஹாராஜா வந்திருந்த சமயம் ஸ்ரீ சாரதாம்பாளுக்கு தெப்போத்ஸவம் அதிமனோஹரமாய் நடத்தப்பட்டது. மறுநாள் மஹா

ராஜா மைசூர் திரும்பிவிட்டார்கள். அவர் தன் ராஜ்ய பாரத்தை வஹிப்பதற்கு முன்னதாக இரண்டாவது தடவை அதே பிரேஸர் துரையுடன் பிலவ-ஹு கார்த்திகை மாசத்தில் சிருங்கேரிக்கு வந்திருந்து அனுக்ரஹம் பெற்றுக்கொண்டு திரும்பினுர்கள். அந்த சமயம் அந்த பிரேஸர் துரை "ஸம்ஸாரிகளான எங்கள் வீட்டிற்கு யாரேனும் வந்தால் ஏதேனும் களை தீர்க்கக் கூடிய காபி, டீ, முதலிய பதார்த்தங்களைக் கொடுத்து உபசரிக்கிருேம். தாங்களோ தங்கள் ஹிருதயத்தில் நிறைந்துகோண்டிருக்கிற அளவில்லாத ஆனந்தத்தை அள்ளி அள்ளி எங்களுக்குக் கொடுத்து எங்களையும் ஆனந்திக்கச் செய்கிறீர்கள்'' என்று சொன்ன வார்த்தை வெகு உண்மையே.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சிலவருஷகாலம் பாஹ்யபூஜாதி ஸகல வியாபாரங்களையும் விட்டு கேவலம் ஞானுப்பியாசத்திலேயே ஊக்கம் கொண்டார்கள். நதீ தீரத்திலும் மணல் திட்டுகளிலும் கல்பாறைகளிலும் தியானத்திற்கு உட்கார்ந்து விடுவார்கள். நரஸிம்ஹ வனத்தையும் விட ஏகாந்த ஸ்தலம் வேண்டுமென்று சில சமயங்களில் ஸமீபத்திலுள்ள நரஸிம்ஹ பர்வதத்தில் போய் பர்ணசாலையில் பூஜாதிகள் செய்துகொண்டு பர்வதத்தின்மேல் இரண்டு மூன்று மைல் ஸஞ்சரித்து ஏகாந்த பிரதேசத்தில் ஞானநிஷ்டையிலிருந்துவிடுவார்கள். ஆத்ம ஞானிக்கு யாரிடமும் பயம் கிடையாது, யாருக்கும் இவரிடமிருந்து பயம் கிடையாது என்கிற லக்ஷணப்பிரகாரம் இவர் இருந்து வந்தார். துஷ்ட மிருகங்கள் கிட்ட வராது.

வந்தாலும் தன் துஷ்டத்தனத்தை மறந்தேயிருக்கும். நரஸிம்ஹ பர்வதத்தில் ஒருநாள் அஸ்தமித்து ஸ்ரீமத் ஆசார்யார் சந்திரமௌளீசுவரர் பூஜை செய்துகொண்டிருக்கும் சமயம் இரண்டு புலிகள் வந்தன. பாராக்காரர்கள் தன் கையில் துப்பாக்கி இருப்பதைக்கூட மறந்து ஓடிப்போய் பர்ணசாலைக்குப் பின் பதுங்கிக்கொண்டார்கள். வந்த புலிகள் தூரவிருந்து பூஜை முடிந்து தீபாராதனையாகும் வரையில் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு அப்புரம் தானுகவே போய்விட்டன. ஒருசமயம் ஸ்ரீமத் ஆசார்யார் ஒரு மரத்தடியில் பீடப்பலகையில் உட்கார்ந்து கொண்டு பேசிக்கொண்டிருக்கும்போது தன் முன்னுவிருந்த சிஷ்யர்கள் தான் சொல்வதை கவனிக்கவில்லையென்று தெரிந்து காரணம் கேட்கையில் பீடப்பலகைக்கு அடியில் ஒரு ஸர்ப்பம் மண்டலமிட்டுக்கொண்டிருப்பதாகத் தெரிந்துகொண்டார்கள். அது அந்தவிடத்தைவிட்டுப் போனலொழிய சிஷ்யர்களுக்கு சமாதானமாகாதென்று தெரிந்து, அப்பலகையை விட்டு எழுந்திருக்காமல் ஒருபக்கமாக நகர்ந்துகொண்டு மற்றொரு பக்கத்தை இடதுகையால் பிடித்துக்கொண்டு தூக்கினுர்கள். பலகைக்கு அடியில் கையைக் கொண்டுபோகிருர்களே என்று சிஷ்யர்கள் பயப்பட்டார்கள். ஆனுல் அந்த ஸர்ப்பம் மெதுவாக மண்டலத்தைப் பிரித்துக்கொண்டு அப்புரம் போய்விட்டது. யோக சாஸ்திரத்தில் சொல்லிய அஹிம்ஸா நிஷ்டை இவர்களிடம் நன்கு இருந்ததால் ஸகல பிராணிகளும் இவர்களிடம் மித்திரபாவத்தையடைந்திருந்தன. இவர்கள் நடந்து போகும்போது

காட்டில் ஏதேனும் ஸர்ப்பம் காலடி சப்தம் கேட்டு வேகமாய்ப் போகவாரம்பித்தால் "மெள்ள, மெள்ள" என்று சொல்வார்கள். அதன்பேரில் அந்த ஸர்ப்பம் வேகத்தைக் குறைத்துக்கொண்டு மெதுவாக நிதானமாகப் போகும். இவ்விதம் துஷ்ட ஜந்துக்களிடத்திலேயே இவர்களுக்கு மைத்ரீ இருக்குமானால் மனுஷ்யர்களிடம் இருந்ததென்று சொல்லவும் வேண்டுமோ?

---

## அத்தியாயம் 7.

### ஸர்வாத்மபாவம்.

யாரேனும் ஒருவர் தன் துக்கத்தை ஸ்ரீஸ்வாமிகளவர்களிடம் தெரிவித்தால் அந்த சமயம் அவர்கள் முகத்திலும் அந்த துக்கம் பிரதிபலிக்கும். அப்படியே பிரபஞ்ச ஞானமேயில்லாத சிறுவர்களிடமும் அவர்களுக்குத் தகுந்தபடி ஸம்பாஷணை செய்து ஸந்தோஷப்படுத்துவார்கள். இந்தியாவிலுள்ள மஹாராஜாக்கள் அநேகர் தர்சனத்திற்கு வந்திருக்கிறார்கள். வித்வான்களும், பாமரர்களும் வந்திருக்கிறார்கள். திரவ்யத்தை அபேக்ஷிக்கிறவர்களும், திரவ்யத்தை அர்ப்பணம் செய்ய நினைப்பவர்களும் வந்திருக்கிறார்கள். துக்கமடைந்தவர்களும், ஸந்தோஷப்பட்டவர்களும் வந்திருக்கிறார்கள். கிரிஸ்துவர்களும், மஹமதியர்களும், சூத்திரர்களும், பிராஹ்மணர்களும் வந்திருக்கிறார்கள். இவ்விதமாக இவர் ஜீவிய

காலத்தில் அநேக லக்ஷம் ஜனங்கள் தர்சனம் செய்திருப்பார்கள். ஒவ்வொருவரும் ஸ்ரீமத் ஆசார்யாருக்கு தன்னிடமுள்ள ப்ரீதியும் அனுக்ரஹமும் மற்ற யாரிடத்திலும் கிடையாதென்றே சொல்வார்கள். இவ்விதமாக எல்லாரிடத்திலும் ஒரே ரீதியாக மனோபாவத்தைக் காட்டமுடிய வேண்டுமானால் இவர் ஸர்வாத்மபாவமடைந்த ஜீவன் முக்தரென்று சொல்வதில் என்ன தடை? இவரை பகவதம்சமென்றே சொல்ல வேண்டுமென்று இப்பொழுதுள்ள ஸ்ரீஜகதாசார்யாரவர்கள்

शिव एव भवानिति मे धिषणा
ह्युदपद्यत देशिक चेन्न तथा ।
सकलं जगदप्यवबुध्यति ते
समतां सकलेष्वपि तत्तु कथम् ॥

என்ற சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்கள். இவர்களுடைய குருநாதரான ஸ்ரீ நரஸிம்ஹ பாரதீஸ்வாமிகள் இவர்களுக்கு ஸதாசிவப்ரஹ்மேந்திரஸரஸ்வதியைப்போலுள்ள நிலையை யடைவாயென்று செய்த அனுக்ரஹம் வியர்த்தமாகுமா?

ஸ்ரீ ஸதாசிவேந்திரருடைய ஆத்மவித்யா விலாசத்தை யாரேனும் ஒரு சிஷ்யரைக்கொண்டு வாசிக்கச்சொல்லிவிட்டு ஐந்தாறு சுலோகங்கள் வாசிக்கிறதற்கு முன்னாலேயே சகல விருத்திகளும் அடங்கி ஸமாதி நிலையடைந்துவிடுவார்கள். ஒரு சமயம் வனத்தில் ஸமாதி நிஷ்டையிலிருக்கும்போது ஒரு காட்டு ஈ இவர்கள் துடையில் உட்

கார்ந்து முள்ளுப்போல் கூர்மையாயுள்ள கொடுக்கினுல் குத்தியதேஷ்டமாய் ரக்தபானம் செய்து விட்டது. துடையின் மேலும் பூமியிலும் ரக்தம் வழிந்திருந்தது. ஸமாதி கலைந்து பஹிர்முகமான பிறகு தான இந்த சம்பவமே அவர்களுக்குத் தெரிய வந்தது. யாத்திரை மத்தியிலும் அநேக இடங்களில் பூஜை தீபாராதனை முடிந்து நமஸ்காரம் செய்து தியானத்திற்கு உட்கார்ந்து சில நிமிஷங்களுக்குள் ஸமாதி நிலைபேறப்பட்டு த்வைத பாவனையற்று இருந்து விடுவார்கள். சிஷ்யர்கள் பிரஸாதத்திற்கு காத்துக் கொண்டிருக்கிறார்களேயென்றும், ஸ்ரீமடம் கார்யங்கள் மேல்நடக்க வேண்டுமேயென்றும் சேண்டியை பலமாக அடித்து ஸமாதியைக் கலைக்கும்படி ஏற்பட்டிருக்கிறது. அப்பொழுதும் தன்னுடைய கருணைப் பெருக்கினுல் இதையொரு அபசாரமாக பாவிக்காமல் பஹிர்முகமாகி சிஷ்யர்களை மந்தஹாஸத்தால் அனுக்ரஹிப்பார்கள்.

---

## அத்தியாயம் 8.

### யோக சக்தி.

இவர்களிடத்தில் ஸித்திகள் தானுகவே ஏற்பட்டது ஆச்சர்யமில்லை. பலவிதமான வியாதிகளால் பீடிக்கப்பட்டவர்களும், புத்திர ஸந்தானத்தை அபேக்ஷித்தவர்களும், பூதப்பிரேத பிசாசாதி ஆவேசமுள்ளவர்களும், மற்றும் அநேகர்களும் தங்கள் தங்களுடைய இஷ்டப் பிராப்திக்

காகவும், அநிஷ்ட நிவிருத்திக்காகவும் ஆசார்யாரை யண்டி பிரார்த்திக்கும்போது அம்பிகையினிடத்தில் பாரத்தைப் போட்டுவிட்டு விபூதியோ ஜலமோ அபிமந்த்ரணம் செய்து கொடுத்தும், யந்திரதாரணம் செய்வித்தும், மந்திரோபதேசம் செய்வித்தும் அவரவர்களுடைய மனோபீஷ்டங்களை நிறைவேற்றிக் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள்

मातर्बाधिर्यमूकीभवनमुखमहारोगसंपीडिताङ्गा
भूताविष्टाश्च तत्तत्प्रशमनमचिरात् काङ्क्षमाणाः सुदूरात् ।
आगत्याऽत्रैव तत्तत्प्रशमनपटुतां मन्यमाना जनेऽस्मिन्
याचन्ते किं प्रकुर्यां वद तुहिनगिरीशानपुत्रीन्दुमौले ॥

என்ற விதமாய் அம்பிகையை பிரார்த்தித்திருக்கிறார்கள். இவர்களுடைய அனுக்ரஹத்தினால் அநுகூலமடைந்த ஜனங்களுக்குக் கணக்கேயில்லை. திருஷ்டாந்தமாக நாகர்கோவிலுக்கு சமீபத்தில் ஆச்ராமம் என்ற கிராமத்தில் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரி என்ற வித்வானுக்கு ஊமையாகவும் செவிடாகவும் ஒரு பிள்ளையிருந்தது. தன் துக்கத்தை அவர் ஆசார்யாரிடம் தெரிவித்ததில் ஒரு மந்திரத்தை உபதேசித்து ஜலத்தில் அபிமந்திரணம் செய்து பிராசனம் செய்து வைக்கும்படி சொன்னார்கள். அப்படியே செய்ய அவனுக்கு வாக்கும் சுரோத்ரமும் சரியாகி கிரமப்படி உபநயன ஸம்ஸ்காரம் செய்விக்கப்பட்டது. இவ்விஷயத்தை இப்பொழுதுள்ள ஆசார்யாரவர்கள்

आश्रामवासिवटुमेकमभाषमाणं
संभाषमाणमकरोत् त्वरितं कृपातः ।

என்று தன்னுடைய நவரத்னமாலிகா ஸ்தோத்திரத்தில் கண்டிருக்கிறார்கள்.

ஆசார்யாரவர்களுடைய ஞாபக சக்தி அபாரமாயுள்ளதென்பதை யாவரும் அறிவார்கள். ஐம்பது வயதுள்ள ஒருவர் காஷாய உடுப்புடன் தலையில் முண்டாசு கட்டிக்கொண்டு வங்காளியென்று சொல்லிக்கொண்டு சிருங்கேரிக்கு வந்தார். அவர் இந்துஸ்தானியும் ஸம்ஸ்கிருதமும் தான் பேசினார். "தமிழ் தெரியுமா?" என்று ஆசார்யார் கேட்க, "தெரியாது" என்று சொன்னார். "இதற்கு முன் இந்தப் பக்கம் வந்திருக்கிறீரா?" என்று கேட்க, "இல்லை" என்று சொல்லிவிட்டார். உடனே ஆசார்யார் தமிழில் "ஏனப்பா, உன் உபநயனத்திற்காக உன்னை அழைத்துக்கொண்டு உன் தாயார் யாசகத்திற்கு வரவில்லையா?" என்று அதட்டிக் கேட்டார். உடனே திடுக்கிட்டு அவர் தமிழில் "ஆமாம்" என்று பதில் சொல்லிவிட்டார். காஷாய உடைதரித்து பொய்சொன்னவரிடம் முகாவலோகனம் செய்யக்கூடாதென்று உடனே ஸ்வாமிகளவர்கள் உள்ளே போய்விட்டார்கள்.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பால்யத்தில் வித்யாப்யாஸம் செய்யும்போது தக்ஷிண தேசத்திலிருந்து சிலர் ஸஹபாடிகளாக இருந்தார்களென்று முன்பு சொல்லப்பட்டது. அப்படியிருந்தவர்களில் ஒருவரான ஸுப்ரஹ்மண்ய தீக்ஷிதர் என்பவருக்கு அப்பொழுதே ஒரு சிறு பெண் இருந்தாள். பின்னால் அவர் ஊருக்குப் போய்விட்டார். இதற்கு முப்பது வருஷம் சென்று வேறு ஏதோ ஒரு ஊரில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தீர்த்தப் பிரஸாதம் கொடுத்துக்

கொண்டிருக்கும் சமயம் ஒரு சுமங்கலியம்மாள் கைநீட்டின வுடன் "தீக்ஷிதர் பெண்ணு?" என்று கேட்டார்கள். நாலைந்து வயதில் பார்த்த குழந்தையை முப்பத்தி ஐந்து வயதான பிறகு எப்படி அடையாளம் கண்டுபிடிக்க முடியுமோ தெரியவில்லை.

இந்த சம்பவங்கள் ஏதோ கொஞ்சம் முகஜாடை இருந்திருக்குமென்று சொல்ல இடம் கொடுக்கலாம். இருபத்தைந்து வயதில் ஒருவர் பஞ்சாக்ஷர உபதேசம் வேண்டுமென்று கேட்க, "கர்ப்ப தீக்ஷை தெரிகிறது. ஸம்ஸாரம் பிரஸவித்த பிறகு வாருங்கள்" என்றூர். தீர்த்தப் பிரஸாதத்திற்காக ஒரு ஸ்திரீ கையை நீட்ட, "நாளைக்கு வந்தால் தருகிறேன்" என்று ஸ்ரீஸ்வாமிகள் சொன்னூர்கள். அவள் வீட்டுக்குப் போனவுடன் தன் பர்த்தா காலமாய்விட்ட விபரம் தெரிந்துகொண்டாள். இவர்களுடைய அசுத்தி ஆசார்யாருக்கு எப்படித் தெரிந்தது? ஒரு ஆலயத்திற்குப் போனவுடன், "முன் நடந்த கும்பாபிஷேகத்தில் காப்புக் கட்டிக்கொண்டவர் அபிஷேகம் செய்யவில்லையென்று தெரிகிறது" என்றூர்கள். விசாரிக்கையில் வாஸ்தவமாக இருந்தது. இன்னொரு ஊரில், "கிராமம் க்ஷீணமாய்ப் போகிறது. பரிஹாரம் செய்து அனுக்ரஹிக்க வேண்டும்" என்று கிராமத்தார் பிரார்த்திக்க, அவ்வூர் சிவன்கோவிலுக்குப் போய் தர்சனம்செய்து, "அம்மனுக்கு பிரதிதினமும் வடையும் பாயஸமும் நைவேத்யம் செய்யுங்கள்" என்று சொன்னூர்கள். அப்படியே செய்ததில் மறுபடியும் கிராமம் செழிப்பையடைந்தது. இதுமாதிரி கணக்கில்லாத

திருஷ்டாந்தங்கள் சொல்லிக்கொண்டே யிருக்கலாம். நம்பிக்கையுள்ளவர்களுக்கு திருஷ்டாந்தங்களே வேண்டாம். நம்பிக்கையில்லாதவர்களுக்கு எத்தனை திருஷ்டாந்தங்கள் சொல்லியும் பிரயோஜனமில்லை.

இவர்களுடைய ஸர்வாத்மபாவத் தன்மையால் எல்லாருடைய மனதிலுள்ள விருத்திகளும் இவர்களுக்கு பிரத்யக்ஷமாயிருந்தது. நாம் ஏதேனும் நினைத்தால் நாம் வாயைவிட்டுச் சொல்வதற்கு முன்னுல் அவர்களிடமிருந்து பதில் வந்துவிடும். வாயைவிட்டுச் சொல்லிவிட்டோமோவென்று நமக்கே ஸந்தேஹம் வந்துவிடும். ஒரு நாள் இவர்கள் தன் குருநாதர் அதிஷ்டானத்தில் பூஜை செய்யும்போது லிங்கத்திற்கு அபிஷேகம் செய்து வெள்ளிக் கவசத்தை எடுத்து சாத்தும்போது, தர்சனம்செய்து கொண்டிருந்த ஒரு சிஷ்யர் "தேவதைகளுடைய ரூபங்களை நாம் பிரத்யக்ஷமாய் பார்த்திராததினுல் நாம் கல்பித்துக் கொள்ளவேண்டியிருக்கிறது. குருநாதர் ஸந்யாஸியாயிருந்து ஸித்தியடைந்திருக்கிருரென்று நன்கு தெரிந்திருக்கிற முறையில் இவருக்குமா பிடிமீசை வைத்து முகம் கல்பிக்கவேண்டும்?" என்று மனதிற்குள் நினைத்தார். அலங்காரமானவுடன் ஸ்ரீமத் ஆசார்யார் இந்த சிஷ்யரைப் பார்த்து மந்தஹாஸத்துடன் "ரூபமற்றவருக்கு ரூபம் கல்பிப்பதில் அது மாத்திரமா உனக்கு உறுத்துகிறது?" என்று கேட்டார்கள்.

திருவனந்தபுரத்தில் பிர்ஸித்த வித்வானுயிருந்த மஹாமஹோபாத்யாய கணபதி சாஸ்திரிகள் பால்யத்தில்

"அபர்ணாஸ்தவம்" என்று ஒரு ஸ்தோத்திரம் அச்சிட்டு ஒரு பிரதி சிருங்கேரிக்கு அனுப்பியிருந்தார். இதற்கு வெகு வருஷங்கள் சென்று ஸ்ரீமத் ஆசார்யார் திருவனந்த புரத்திற்கு விஜயம்செய்த சமயம் இந்த ஸ்தோத்திரத்தை அவர்கள் பார்த்திருப்பார்களாவென்ற சந்தேஹம்தோன்றி வேறொரு பிரதியை கையில் எடுத்துக்கொண்டு சாஸ்திரி கள் அவர்களை தர்சிக்கச் சென்றார்கள். ஆனால் இவர் போ கும் சமயம் ஸ்ரீமத் ஆசார்யார் உபந்யாஸத்திற்கு உட்கார்ந் துகொண்டு விட்டார்கள். சாஸ்திரிகளுக்கு இந்த ஸ்தோத் திரத்தை ஸமர்ப்பிக்க வேண்டுமென்ற சித்த விருத்தியே இருந்துகொண்டிருந்தபடியால் உபந்யாஸத்தை நன்கு கிரஹிக்க முடியவில்லை. உபந்யாஸத்தில், தர்மாசரணம் அவசியமென்று ஸ்ரீமத் ஆசார்யார் சொல்லிவரும் சமயம், "இக்காலத்தில் தர்மம் ஆசரிக்க வேண்டுமென்பது வாஸ் தவம். ஆனால் தர்மத்தை ஆசரிக்க வேண்டுமென்று நினைத்தாலே புண்யம் உண்டென்று தோன்றுகிறது" என்று சொல்லிவிட்டு, "இவ்விஷயமாக ஒரு பெரியவர் ஒரு அழகான சுலோகத்தில்

"प्रशस्तेष्विच्छाऽपि प्रभवति हि पुण्याय विधिषु ।"

என்று சொல்லியிருக்கிறார்கள்" என்று சொன்னார்கள். அது அபர்ணாஸ்தவத்திலுள்ள மூன்றாவது சுலோகத் தின் நான்காவது பாதம். உடனே சாஸ்திரிகளுக்கு மனது சமாதானமாகி உபந்யாஸத்தை நன்கு கவனித்தார். "எனக்கு கிடைத்ததாவென்று ஸந்தேஹப்பட வேண் டாம். கிடைத்தது; ஞாபகத்திலும் வைத்துக்கொண்




ஸ்ரீமத் ஆசார்யேந்த்ராள், ப்ரவசன ஸமயம்



மைஸூர் மஹாராஜா சாமராஜ உடையார்

டிருக்கிறேன்'' என்று அனுக்ரஹித்ததாகத் தெரிந்து கொண்டார். இவ்விதமான சம்பவங்கள் பிரதி சிஷ்யரிடத்திலும் ஏற்பட்டிருப்பதை யாவரும் அறிவார்கள்.

இவருடைய மஹிமையும் ஆத்ம சக்தியும் பரதகண்டத்தில் மிகவும் கியாதியடைந்தது. உத்தர தேசத்திலிருந்தும் இவர்களைக் கண்டு தர்சிக்க அநேகம் யோகிகளும் பிரபுக்களும் வருவார்கள். யோக மார்க்கத்தில் பரிசிரமப்பட்டிருந்தால் அவர் எந்த ஜாதியாயிருந்தாலும் அவரிடமிருந்து புதிய விஷயங்களை கிரஹிப்பதில் ஸ்ரீமத் ஆசார்யார் ஊக்கம் கொள்வார்கள். ஒருநாள் ஒரு யோகி வந்து தான் கேசரீ முத்திரை ஸாதித்திருப்பதாகச் சொல்லி அதைப் போட்டுக்காட்டினர். அதாவது உள் நாக்கை இரண்டாக கத்தரித்து இரண்டு பாகங்களின் இடையில் முன்நாக்கை மடித்து அதன் நுனியை சொருகிக்கொண்டிருந்தால் பிரதி சுவாஸத்திலும் நாதம் ஏற்படும். அதை பிரணவமாக அனுசந்தானம் செய்வது கேசரியாகும். அவர் இதைக் காட்டினவுடன் கண்டு ஸந்தோஷித்து ஸ்ரீமத் ஆசார்யார் "என் உள்நாக்கைப் பாருங்கள்'' என்று காட்டினார்கள். அது கத்தரிக்கப்படாமல் ஸாதாரணமாகவே யிருந்தது. உடனே பத்மாஸனத்தில் உட்கார்ந்துகொண்டு பிராண நிரோதம் செய்தார்கள். அந்த யோகி காட்டினதைவிட சுத்தமாக நாதம் ஏற்பட்டது. இதைக்கண்டு அந்த யோகி ஆச்சர்யப்பட்டார். "அங்கங்களை கிலேசப்படுத்தித்தான் யோகாப்யாஸம் செய்ய வேண்டுமென்பதில்லை யென்பதற்காகவே காட்டினேன்'' என்று ஸ்ரீமத் ஆசார்யார்

சொன்னார்கள். யோகத்தில் எவ்வளவு தேர்ச்சியடைந்தார்களென்பதைப்பற்றி மற்றவர்கள் சொல்வதற்கில்லை. ராத்திரி வேளைகளில் அவர்கள் பூமிஸ்பர்சமில்லாமலே அந்தரிக்ஷத்தில் ஆஸனமிட்டு ஸமாதியிலிருந்ததைப் பார்த்து சிலர் திடுக்கிட்டிருப்பதாகவும் தெரிகிறது. நமக்கு ஒரு காரியம் ஸாத்யமாகத் தோன்றவில்லையென்பதை வைத்துக்கொண்டு, அது மஹான்களுக்கும் ஸாத்யமில்லையென்றும் ஸாத்யம்தான் என்று யாரேனும் நேரில் பார்த்துச் சொன்னாலும் அது வெறும் கட்டுக்கதையென்றும் சொல்வதே இக்காலத்தில் ஸஹஜமாகிவிட்டபடியால், மஹான்கள் நம் திருஷ்டிக்கு விஷயமாகாமலே இருந்துவிடுகிறார்கள். திருஷ்டிக்கு விஷயமானாலும் நம்மைப்போல் ஸாமான்ய மனுஷ்யராகத் தோன்றுவதால் அவர்களுடைய மஹத்வத்தை நாம் அறிந்து உபயோகித்து கிருதார்த்தர்களாக வழியில்லாமல் போய்விடுகிறது.

ஸ்ரீமத் ஆசார்யாருடைய மஹிமையைக் கேட்டு அவர்களுடைய அனுக்ரஹம்பெற்று காசியில் ஹிந்து ஸர்வகலாசாலை ஆரம்பிக்க வேண்டுமென்று உத்தர தேசத்திலுள்ள ஆஸ்திகர்களுக்கு பிரதிநிதியாக பிரயாகையில் மிக பிரஸித்தராயிருந்த மதனமோஹன மாளவ்யா என்ற பிரபு, ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காசிக்கு விஜயம் செய்து அந்த கலாசாலை நிர்மாணத்திற்காக ஆரம்ப அஸ்திவாரக்கல்லை பிரதிஷ்டைசெய்து கொடுத்து அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்திப்பதற்காக தத்தாத்ரேய கிருஷ்ண தாமலே என்ற கிருஹஸ்தரை அனுப்பி

னர். அப்பிரபுவின் பிரயத்னத்தை ஆசார்யார் மிகவும் கொண்டாடினார்கள். ஆனால் காசிக்கு அவஸரத்தில் வருவது ஸாத்யமில்லையென்று சொல்லி ஸர்வமங்களப் பிரதங்களான தன் குருநாதருடைய பாதுகைகளை எடுத்துக்கொடுத்து, ''இப் பாதுகைகளை அக்கிராஸனத்தில் வைத்து உங்கள் கார்யத்தை ஆரம்பம் செய்யுங்கள். நீங்கள் ஸங்கல்பித்த கார்யம் ஸித்தியடையும்'' என்று அனுக்ரஹித்து அனுப்பினார்கள். அப்படியே அவர் திரும்பிப்போய் மாளவ்யா அவர்களின் ஏற்பாட்டின் பேரில் ஸர்வகலாசாலை ஆரம்பிக்கப்பட்டது. பின்னல் தன் நன்றியை நேரில் தெரிவித்து பாதுகைகளை திருப்பிக் கொடுத்து ஸ்ரீமத் ஆசார்யாருடைய அனுக்ரஹத்தைப் பெற்றுக்கொண்டு போவதற்காக மாளவ்யா அவர்கள் ஸ்ரீமத் ஆசார்யாரின் காலடி யாத்திரை மத்தியில் சோழவந்தான் கிராமத்தில் வந்து தர்சனம் செய்துவிட்டுப் போனார். இதிலிருந்து லௌகிக கியாதியைவிட தர்மாசரணையும் ஸம்பிரதாய பரிபாலனமுமே பெரிதென்று ஸ்ரீமத் ஆசார்யார் நன்கு காட்டியிருக்கிறார்கள்.

---

## அத்தியாயம் 9.

### குருபக்தி.

ஸ்ரீமத் ஆசார்யாருடைய குருபக்தி மேலே சொல்லிய விஷயங்களிலிருந்தே நன்கு தெரியவரும். அவர்கள் பிரதிதினமும் நித்யாஹ்னிகங்கள் தொடங்குவதற்கு

முன்னமேயே குருநாதருடைய பாதுகைகளை தன் இரண்டு கரங்களாலும் எடுத்து கண்களில் ஒத்திக் கொண்டு வஸ்திரத்தால் தூசிகளைத் துடைத்துவிட்டு தன் சிரஸ்ஸில் தரித்துக்கொண்டு

शरणं न भवति जननी
शरणं न पिता न सोदरो नान्यः ।
परमं शरणमिदं मे
चरणं मम शिरसि देशिकन्यस्तम् ॥

என்ற சுலோகத்தை மிகவும் உருக்கமாக உச்சரித்துக் கொண்டு ஹிருதயத்தில் கொஞ்சநேரம் வைத்து அப்புறம் பீடத்தில் வைத்து கந்தபுஷ்பாதிகளால் அலங்காரம் செய்து ஸேவிப்பார்கள். தான் எந்த காரியம் செய்வதாயிருந்தாலும் குருநாதரிடம் அனுமதி கேட்காமல் செய்வது கிடையாது. செய்துமுடித்தவுடன் அவர்களிடம் ஸமர்ப்பணம் செய்வார்கள். பீடாபரிஹாரத்திற்காக வரும் சிஷ்யர்களுக்குக் கொடுக்கும் விபூதியையும் பாதுகைகளில் அர்ப்பணம் செய்து பிறகே அபிமந்திரணம் செய்து கொடுப்பார்கள். எந்த ஸந்தர்ப்பத்திலும் அந்த குருநாதரின் அனுக்ரஹமின்றி தன்னிடத்தில் வேறு சக்தியிருப்பதாக நினைத்ததில்லை. இப்படியே எல்லாருக்கும் குருபக்தி ஏற்படும்படி செய்வார்கள். ஆதிகுருவான ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்யார் அவதரித்து நம் வைதிக மதத்தை ஸம்ரக்ஷணம் செய்து கொடுத்ததற்கு நன்றி காட்டுகிற ரீதியிலாவது அவர்களுடைய ஜயந்தீ மஹோத்ஸவத்தை நன்கு நடத்த வேண்டுமென்று தானே

கூடவிருந்து வைசாக சுக்கில பிரதமை முதல் பஞ்சமி வரையில் வெகு உத்ஸாஹமாக உத்ஸவம் நடத்துவார்கள். அவர்கள் ஆரம்பித்துவிட்டது இப்போழுது தேசம் பூராவும் பரவியிருப்பது மிகவும் ஸந்தோஷிக்கத்தக்கதே.

இவ்விதமாக மன்மத வருஷம் (1895) சிருங்கேரிக்குத் திருப்பி வந்தது முதல் பராபவ வருஷம் (1907) வரை பன்னிரண்டு வருஷகாலம் யோகாப்யாஸம், வேதாந்த விசாரம், ஆத்மதியானம், குருதேவதோபாஸனை என்றவாறு ஆனந்தமாயிருந்து வந்தார்கள். இதன் மத்தியில் ஸந்யாஸிகளுக்கும் மற்றும் அதிகாரிகளுக்கும் பிரஸ்தானத்ரய பாஷ்யம் மூன்று தடவை பாடம் சொன்னார்கள்.

இது தவிற லௌகிக ரீதியாய் பார்த்தாலும் ஸ்ரீமடம் எவ்வளவோ முன்னேற்றம் அடைந்தது. மைசூர் மஹாராஜாவினுடையவும் அவர் திவான் ஸர் கே. சேஷாத்திரி அய்யருடையவும் ஸஹாயத்தினாலும் சிருங்கேரி ஸம்ஸ்தானத்திற்கும் அதிலுள்ள குடிகளுக்கும் ஒரு வியவஸ்தை செய்யப்பட்டது. வெகுகாலமிருந்து ஏற்பட்டிருந்த கடன் முழுவதும் தீர்க்கப்பட்டது. வரும்படியும் இரண்டு மடங்கு ஏற்பட்டது. ஸ்ரீமடத்தின் கட்டிடங்களில் அநேகமாக எல்லா பாகங்களும் முன்னைவிட ஸௌகர்யமாயும் நாகரிகமாயும் புதுப்பிக்கப்பட்டன. ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயமும் அழகாயும் விசாலமாகவும் கற்களினாலேயே அமைக்கப்பட்டது. தர்சனார்த்தம் வருகிறவர்களுடைய ஸௌகர்யத்திற்காக விஸ்தாரமாக தர்ம

சாலைகள் கட்டப்பட்டன. வருஷம் ஒன்றுக்கு ரூ. 12000 செலவாகக்கூடியதாக இரண்டு பாடசாலைகள் ஏற்பட்டு வித்யார்த்திகளுக்கு ஸகலவித அனுகூலங்களையும் செய்து கொடுத்து ஸம்ஸ்க்ருத வித்யையும் சாஸ்திராப்யாஸமும் ஏற்படும்படி வேண்டிய கார்யங்கள் செய்யப்பட்டன. புதிதாக தங்கம் வெள்ளி ரத்னம் இவைகளில் வாஹனங்கள், ஆபரணங்கள், பாத்திரங்கள் வகையரு பதார்த்தங்கள் ஏராளமாய் சேகரிக்கப்பட்டன. இவ்வித கார்யங்களை ஸ்ரீமடத்தின் கௌரவத்திற்கும் மஹிமைக்கும் தக்கபடி செய்து வைத்ததில், பால்யம் முதல் குருஸேவையில் ஈடுபட்டு ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு நிழல்போல் கூடவிருந்து ஸ்ரீமடம் வைதிக கார்யங்களையும் லௌகிக கார்யங்களையும் மிக்க ஊக்கத்துடனும் பக்தியுடனும் நிறைவேற்றிக்கொடுத்த பாக்கியம் ஸர்வாதிகாரியாயிருந்துவந்த குருஸேவாப்ரவீண ஸ்ரீகண்ட சாஸ்திரிகளையே சேர்ந்தது.

இவ்வளவு செய்தும்கூட ஆசார்யாருக்கு ஆதிசங்கர பகவத்பாதாசார்யார் விஷயத்தில் நாம் காட்டிவரும் பக்தி போதாதென்ற எண்ணமிருந்துகொண்டு வந்தது. அவர்களுடைய ஜன்ம பூமியைக் கண்டுபிடித்து அங்கு ஒரு தேவாலயம் கட்டி ஆசார்ய மூர்த்தியை பிரதிஷ்டை செய்து ஆஸேது ஹிமாசலமுள்ள சிஷ்யர்களுக்கு அதையொரு யாத்ரா க்ஷேத்ரமாகச் செய்யவேண்டுமென்ற ஸங்கல்பம் ஏற்பட்டது. சிருங்கேரிக்கு தர்சனத்திற்கு வந்திருந்த ஸர் கே. சேஷாத்திரி அய்யரிடம் பிரஸ்தாபித்தார்கள். அவர் மலையாள தேசத்திலுள்ள பாலக்காட்டைச் சேர்ந்தவரானதினாலும், ஆசார்யாருடைய ஸங்கல்

பத்தை பூர்த்திசெய்து கொடுக்கவேண்டுமென்ற ஊக்கத்துடன் கூடியவரானதினுலும், விசாரிக்கவாரம்பித்து திருவனந்தபுரம் ஸம்ஸ்தானத்திய அதிகாரிகளுடைய ஸஹாயத்தினுல் ஆசார்ய ஜன்ம பூமியான காலடி என்ற ஸ்தலத்தைக் கண்டுபிடித்து அங்கே நேரில்போய் அதுதான் ஸ்தலமென்று பலவித அடையாளங்களால் தீர்மானித்துக்கொண்டு சிருங்கேரிக்கு வந்து எல்லா வரலாற்றையும் சொன்னுர். உடனே வேண்டிய ஏற்பாடுகள் செய்ய சௌகர்யப்படாமல் அதுமுதல் பிரதிவருஷமும், தன்னிடத்தில் விசேஷ பக்தியும் பாண்டித்யமும் வாக்குத்திறமையுமுள்ள சிஷ்யர் நடுக்காவேரி பிரஹ்மஸ்ரீ ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகள் என்பவரை அந்த ஸ்தலம் போய், ஆசார்யார் அவதார தினமாகிய வைசாக சுக்ல பஞ்சமியில் பக்கங்களிலுள்ள சிஷ்யர்களை சேர்த்துக்கொண்டு, பூர்ணு நதீ தீரத்தில் ஆசார்யாரை உத்தேசித்து விசேஷமாக பூஜை, பிராஹ்மண ஸந்தர்ப்பணம், உபந்யாஸம் முதலானவைகளை நடத்தி ஸாமான்யமாய் ஜந்மோத்ஸவம் செய்யும்படி ஏற்பாடு செய்தார்கள். அப்படியே வெகு வருஷங்கள் நடந்துவந்தன.

இதன் மத்தியில் ஸர் கே. சேஷாத்திரி அய்யரும், ஸ்ரீநிவாஸ சாஸ்திரிகளும் காலகதியடைந்து விட்டார்கள். ஆனுல் ஸ்ரீமத் ஆசார்யாரிடம் அனுக்ரஹம்பெற்று பிரஸித்தராயிருந்த வி. பி. மாதவராவ் மைசூர் மந்திராலோசனை ஸபையில் இருந்தவர் திருவனந்தபுரம் மஹாராஜாவால் அழைக்கப்பட்டு அவ்விடத்தில் திவான் பதவியிலிருந்தார். மைசூர் ஹைகோர்ட்டில் ஜட்ஜாயிருந்த

A. ராமசந்திரய்யர் என்பவர் ஸ்ரீமத் ஆசார்யாரிடம் மிகவும் ஈடுபட்டு அவர்களுடைய ஸங்கல்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்ற எண்ணத்துடன் அவர்கள் அனுமதி பெற்று ஸர்வாதிகாரி ஸ்ரீகண்ட சாஸ்திரிகளையும் அழைத்துக்கொண்டு திருவனந்தபுரம் போய் மஹாராஜாவிடமும் திவானிடமும் விஷயத்தைத் தெரிவித்தார்கள். அந்த சமயம் பிரிட்டிஷ் ராஜப் பிரதிநிதி கர்ஸன் பிரபு அவர்கள் இத்தேசத்திலுள்ள புராதனமான சில்பங்களையோ க்ஷேத்திரங்களையோ சர்க்காரிலிருந்தே காப்பாற்ற வேண்டுமென்று ஏற்படுத்திய நியமத்தை யனுசரித்து ஆசார்ய ஜன்ம பூமியையும் அதன் பக்கத்திலுள்ள சில பிரதேசங்களையும் திருவனந்தபுரம் சர்க்கார் ஸ்வாதீனப் படுத்திக்கொள்ள ஸௌகர்யமேற்பட்டது. அவ்விதம் ஸ்வாதீனப்படுத்திக் கொள்ளப்பட்ட பூமியை ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு உபஹாரமாக கொடுத்ததுடன் அந்த ஸ்தலத்தை பரிஷ்காரம் செய்து தேவாலயம் கட்டுவதற்காக பதினாயிரம் ரூபாயும் கொடுத்தார்கள். இவ்விஷயங்களை யெல்லாம் சிருங்கேரிக்குப் போய் ஸ்ரீமத் ஆசார்யாரிடம் விக்ஞாபனம் செய்ததில் அவர்கள் மிகவும் ஸந்தோஷப்பட்டார்கள்.

———

# அத்தியாயம் 10.

## காலடி யாத்திரை.

காலடி பிரதிஷ்டையை உத்தேசித்து யாத்திரை புறப்படலாமாவென்று ஸ்ரீ சாரதாம்பாளிடம் உத்தரவு கேட்டதிலும் அனுகூலமாகக் கிடைத்தது. பராபவ மாக சுக்ல பஞ்சமீ தினம் (18-1-1907) யாத்திரையாக புறப்படுவதாகத் தீர்மானம் செய்துகொண்டார்கள். அதற்குள் ஏ. ராமசந்திரய்யரையே காலடி பரிஷ்காரம் ஆலய நிர்மாணம் இவைகளின் பொறுப்பை வஹிக்க வேண்டுமென்று உத்தரவுசெய்து, யந்திரங்கள் விபூதிப் பிரஸாதங்களுடன் காலடிக்கு அனுப்பினார்கள். ஸ்ரீமத் ஆசார்யார் சிருங்கேரியை விட்டுப் புறப்படும்முன் தான் தர்சனம் செய்ய வருவதாக மைசூர் மஹாராஜா சொல்லியனுப்பினர். ஆனால் அவர் வருவதற்கு கொஞ்சம் தாமஸமாகுமென்று தெரிந்து, தன் முன் ஸங்கல்பப்படியே மாக சுக்ல பஞ்சமீ தினம் நரஸிம்ஹ வனத்திலிருந்து பிரயாணமாகி வடகரையில் தன் குருநாதர் அதிஷ்டானத்திற்கு வந்து உத்தரவு பெற்றுக்கொண்டு, ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்திலிருந்து வெளிவர பிரியப்படாமல் தயங்கித் தயங்கிக்கொண்டு ஒருவாறு ஸமாதானப்படுத்திக்கொண்டார்கள். அவ்வாலயத்தை நல்ல கல் கட்டிடமாக கட்டவேண்டுமென்று வேண்டிய ஏற்பாடுகள் நடந்திருந்தபடியால் தன்னுடைய அமிருத ஹஸ்தத்தால் அஸ்திவாரக்கல்லை பூஜித்து, தக்ஷிண தேசத்திலிருந்து வந்திருந்த சில்பிகளுக்கு அனுக்ரஹம் செய்து பிரஸாதம்

கொடுத்து, ஆலய வேலையை ஆரம்பம் செய்யும்படி அநுமதி கொடுத்துவிட்டுப் புறப்பட்டார்கள். ஸ்ரீமத் பகவத் பாதாசார்ய மூர்த்தியையும் ஸ்ரீ சந்திர மௌளீசுவரர் சம்புடத்தையும் தங்கப் பல்லக்கில் வைத்து, தான் கால் நடையாகவே பிரயாணத்தை ஆரம்பித்தார்கள். ஸ்ரீமடத்திற்கு வெளியில் புறப்பட்டவுடன் கிராமவாஸிகள் எல்லோரும் ஸ்ரீஸ்வாமிகளவர்களை விட்டுப் பிரிவதிலுள்ள ஆராமையைக் க்காட்டியதின்பேரில், தேவதா பிம்பங்கள் ஸஹிதமாகவே கிராமம் பூராவும் சுற்றிவந்து ரக்ஷை ஏற்படுத்தி ஸமாதானம் செய்ததுடன், அநேகர்களுடைய பிரார்த்தனைக்கு இணங்கி அவரவர்கள் கிருஹங்களில் பிரவேசித்து பாததூளியால் பரிசுத்தி செய்துவிட்டு, ஸாயங்காலம் ஆறுமணி சுமாருக்கு சிருங்கேரியை விட்டு புறப்பட்டார்கள்.

ராத்திரி ஹு ஹுகாரு என்ற கிராமத்தில் சென்ன கேசவராயர் வீட்டில் வாசம் செய்து, மறுநாள் ரிஷ்யசிருங்க முனிவரின் ஆசிரமமான கிக்க என்ற க்ஷேத்திரம் புறப்படும் சமயம், அந்த சென்ன கேசவராயர் காலடி க்ஷேத்திர நிர்மாணத்திற்கென்று இரண்டாயிரம் ரூபாய் கொடுத்தார். தான் உத்தேசிக்கும் காரியத்திற்கு இது நல்ல சுபசகுனமென்று ஆனந்தப்பட்டார்கள். மறுநாள் ரிஷ்யசிருங்கேசுவரரை தாமாகவே பூஜைசெய்து, அதற்கு மறுநாள் அங்கிருந்து ஐந்துமைல் தூரத்திலுள்ள நரஸிம்ஹ பர்வதம்போய் சிலநாட்கள் ஆத்ம நிஷ்டையிலிருந்துவிட்டு, கிருஷ்ணபஞ்சமீ தினம் மஹாராஜாவை எதிர்பார்த்து சிருங்கேரிக்கு விஜயம் செய்தார்கள். மறுநாள்

காலையில் மஹாராஜா தன் தாயார், பார்யை, ஸஹோதரர் இவர்களுடன் வந்தார். அவர்களுக்கு உசிதமான மரியாதைகளுடன் வரவேற்பு நடந்தது. சைவ பஞ்சாக்ஷரீ மஹாமந்திரத்தை உபதேசித்து ஒரு ஸ்ரீசக்ர யந்திரத்தையும் சிவலிங்கத்தையும் கொடுத்து ஆராதித்து வரும்படி சொல்லி அனுக்ரஹித்தார்கள். மிகவும் பக்தி சிரத்தையுடன் அங்கீகரித்துக் கொண்டு, ஸ்ரீமத் ஆசார்யாருடைய மங்களகரமான வரவை தன் ராஜதானியில் எதிர்பார்த்துக்கொண்டிருப்பதாக விக்ஞாபனம் செய்துவிட்டு உத்தரவு பெற்றுக்கொண்டார். பிறகு மஹாசிவராத்திரி மஹோத்ஸவத்தையும் சிருங்கேரியிலேயே முடித்துக்கொண்டு கடூர், ஹாஸன், தும்கூர் வழியாக பங்களூர் வந்துசேர்ந்தார்கள்.

காலடி ஸ்தலம் விஷயமாக அனுகூலம் செய்ததாக முன் பிரஸ்தாபிக்கப்பட்ட வி. பி. மாதவராவ் இந்த சமயம் மைசூர் திவானாகவே யிருந்தார். ராஜ மரியாதைகளுடன் ஸ்ரீஸ்வாமிகள் வரவேற்கப்பட்டு மாதவராயர் பங்களாவிலேயே தங்கினார்கள். இந்த ஸந்தர்ப்பத்தில் பங்களூரில் வித்யா பிரசாரத்திற்காக ஒரு மடம் கட்ட வேண்டியது அவசியமென்று மாதவராயர் பிரஸ்தாபித்தார்.

ஜட்ஜ் A. ராமசந்திரய்யரும் அந்த சமயம் தர்சனத்திற்கு வந்திருந்தவர், தன் விசாலமான பங்களாவையே இதற்காக அர்ப்பணம் செய்வதாகவும், வேறு இடத்தில் புதிதாக கட்டுவதானால் தான் இருபதினாயிரம் ரூபாய் கொடுப்பதாகவும், விக்ஞாபனம் செய்துகொண்டார். இவ்

விஷயத்தில் அங்குள்ள சிஷ்யர்கள் யாவருக்கும் ஊக்க மிருப்பது தெரிந்துகொண்டு, முதலில் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாருக்கு ஒரு ஆலயம் கட்டிவைத்து, பின்னுல் காலக்கிரமத்தில் விஸ்தாரமாக மடம் கட்டலாமென்று தீர்மானித்து இப்பொறுப்பை மாதவராயரிடத்திலேயே கொடுத்தார்கள். அவர் உடனே வேண்டிய ஏற்பாடுகள் செய்து விசாலமாக ஓரிடத்தை பரிஷ்காரம்செய்து கட்டட வேலைக்கு வேண்டிய சாமான்களைத் தன் வீட்டிலிருந்தே அனுப்பி இரண்டுவாரத்தில் ஆலயத்தைக் கட்டி முடித்துவிட்டார். அவருடைய ஸாமர்த்தியத்தையும் உத்ஸாஹத்தையும் கண்டு மிகவும் சந்தோஷித்து காலடியில் பிரதிஷ்டை செய்வதற்காக தயாராயிருந்த அமிருத சிலா மூர்த்தியையே பிலவங்க வைசாக கிருஷ்ண துவாதசி சுக்கிரவாரத்தன்று விதிப்படி பிரதிஷ்டை செய்தார்கள்.

பிறகு அங்கிருந்து புறப்பட்டு, பிடதி, குளோஸ் பேட்டை, சென்னப்பட்டணம் வழியாக மைசூருக்கு விஜயமானுர்கள். அநன்ய ஸாதாரணமான ராஜமரியாதைகளுடன் வரவேற்கப்பட்டு அரண்மனையில் பழய ஸம்பிரதாயப்படி செய்யப்பட்ட பாதபூஜை முதலிய ஸத்காரங்களை ஏற்றுக்கொண்டு ராஜதானியில் பதிமூன்று நாள் தங்கினுர்கள். அங்கிருந்து நஞ்சன்கூடுக்குப் போய், ஸ்ரீகண்டேசுவரர் பூஜைகளை செய்துகொண்டு மூன்று நாள் அங்கே தாமதித்துவிட்டு, சாமராஜ நகரம் ஸத்யமங்கலம் வழியாக கோபிசெட்டிப்பாளையம் வந்து, அந்த அக்ரஹாரத்தில் அவ்வருஷத்திய சாதுர்மாஸ்ய ஸங்கல்பம், நவ

ராத்திரி மஹோத்ஸவம் இவைகளை நடத்திக்கொண்டு, பவானீ, ஈரோடு மார்க்கமாய் கரூர் வந்துசேர்ந்தார்கள். அங்கிருந்து நெரூருக்கு விஜயம்செய்து, ஸ்ரீ ஸதாசிவ ப்ரஹ்மேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளவர்களின் அதிஷ்டானத்தில் விசேஷமாக பூஜாதிகள் செய்து, பலவித சுலோகங்களால் ஸ்துதிசெய்து தண்ட நமஸ்காராதிகள் செய்து, அம்மஹானுடைய ஸ்மரணத்திலேயே பரவசராகி ஆனந்தமனுபவித்தார்கள். பிறகு காவேரீ தீரத்திலுள்ள அக்ரஹாரங்களில் மஹாஜனங்களுடைய பிரார்த்தனைக்கு இணங்கி தங்கி ஜனங்களை அனுக்ரஹித்துக் கொண்டு ஜம்புகேச்வரம் வந்தார்கள்.

அங்கு ஆலய ஜீர்ணோத்தாரம் செய்துவந்த கானடுகாத்தான் சிதம்பரம் செட்டியார் ஏற்கனவே கோபிசெட்டிப்பாளையத்திற்கு வந்து பிரார்த்தித்துக்கொண்டபடி, கும்பாபிஷேக சமயத்தில் ஸ்ரீமத் ஆசார்யார் ஜம்புகேச்வரம் விஜயம்செய்து, ஜம்புநாதர் அகிலாண்டேசுவரி அம்மன் தர்சனம்செய்து சிதம்பரம் செட்டியாருடைய ஸேவையை அபிநந்தனம் செய்து பிரஸாதம் கொடுத்தார்கள். சிருங்கேரியில் ஸ்ரீ சாரதா தேவாலய நிர்மாண கார்யத்திலும் இவரே பொறுப்பேற்றுக் கொள்வதாக இவரும் இவர் குமாரர் ராமஸ்வாமி செட்டியாரும் கேட்டுக்கொண்டதில், ஸ்ரீமத் ஆசார்யாரும் மிகவும் சந்தோஷித்து அப்படியே நடக்கட்டும் என்று அனுக்ரஹித்தார்கள். பிறகு ஸ்ரீரங்கத்தில் டி. கே. பாலஸுப்ரஹ்மண்ய அய்யர் கிருஹத்தில் விசேஷ பக்தியுடன் வஸதி செய்துகொடுக்கப்பட்டு ஸ்ரீரங்கநாதரை ஏகாந்தமாக தர்சித்து ஆனந்த

பரவசரானார்கள். பிறகு திருச்சினாப்பள்ளிக்குப் போய், அங்கிருந்து தாண்டவராயபிள்ளையின் வேண்டுகோளின் பேரில் அய்யம்பாளையத்திற்கு விஜயம் செய்து அங்கே ஒரு மாஸகாலம் தங்கினார்கள். அந்த பக்தரின் பிரார்த்தனைக்கு இசைந்து அங்கு ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யாருடைய மூர்த்தியை பிரதிஷ்டை செய்வித்தார்கள். அந்த சமயம் பால்குன கிருஷ்ண ஏகாதசியில் (28-3-1908) ஸ்ரீஸ்வாமிகளுக்கு 50வது வயது பூர்த்தியானபடியால், அதன் ஞாபகார்த்தமாக தாண்டவராய பிள்ளையின் கோரிக்கைப்படி, ஸ்ரீஸ்வாமிகளின் அனுமதிபெற்று ஸ்ரீமத் ஆசார்ய மூர்த்திக்கு வலதுபக்கத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்களின் மூர்த்தியொன்று ஸர்வாதிகாரி ஸ்ரீகண்ட சாஸ்திரிகளால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

அங்கிருந்து புதுக்கோட்டை மார்க்கமாக கோவிலூர் சென்றார்கள். அங்குள்ள நாட்டுக்கோட்டை செட்டியார் வகுப்பைச்சேர்ந்த மடாதிபதி வீரப்ப தேசிகருடைய பிரார்த்தனைக்கு இணங்கி அங்கு நடந்த தேவாலய கும்பாபிஷேகத்திற்கும் ஸ்ரீ சங்கர ஜயந்தீ மஹோத்ஸவத்திற்கும் அங்கேயே தங்கிவிட்டு, பிறகு காரைக்குடி, கானடுகாத்தான், பள்ளத்தூர், கோட்டையூர், தேவகோட்டை முதலான கிராமங்களில் நாட்டுக்கோட்டை செட்டியார்களின் ஸத்காரங்களைப் பெற்றுக்கொண்டு அவர்களுக்கு அனுக்ரஹம் செய்துகொண்டு, ஸுப்ரஹ்மண்ய க்ஷேத்ரமான குன்னக்குடிக்கு விஜயம் செய்தார்கள். அங்கு கீலக வருஷத்திய சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை நிறைவேற்றிவிட்டு திருப்பத்தூரில் நவராத்திரி மஹோத்ஸ

வத்தை நடத்திவிட்டு கிரமமாய் ஹாலாஸ்ய க்ஷேத்திர மான மதுரைக்கு வந்து வழக்கம்போல் கல்யாண மண்ட பத்தில் ஜாகை செய்து இருபத்தைந்து தினம் அங்கரத் தில் தங்கி சிஷ்யர்களுக்கு விசேஷமாக அனுக்ரஹம் செய்துவிட்டு, திருப்புவனம், மானுமதுரை, பரமக்குடி மார்க்கமாய் ராமனுதபுரம் போய், அங்கு ஜமீன்தாரான முத்துராமலிங்க ராஜராஜேச்வர ஸேதுபதியவர்களால் விசேஷமாக ஸத்காரம் செய்யப்பட்டு அவருக்கு அனுக்ர ஹம் செய்துவிட்டு, மண்டபம், பாம்பன் வழியாக கீலக கார்த்திக சுக்ல ஏகாதசி (4-11-1908) புதவாரத்தன்று ராமேசுவர க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்கள். தனுஷ்கோடியில் மூன்றுநாட்களும் ராமேசுவரத்தில் இரண்டு வாரமும் வாஸம் செய்தார்கள்.

பிறகு வத்திராயிருப்பு, ஸ்ரீவில்லிப்புத்தூர், தென் காசி வழியாக தாம்ரபர்ணீ தீரத்தில் ஏகாந்தமாயும் அதிரமணீயமாயுமுள்ள பாபவிநாச க்ஷேத்திரம் வந்து, அங்கு ஸௌம்ய வருஷத்திய சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை நடத்தி மூன்று மாஸம் தாமஸித்து ஆனந்தமாயிருந்தார் கள். பிறகு தீர்த்தபதி சிங்கம்பட்டி ஜமீன்தாரால் பிரார்த்திக்கப்பட்டு பாணதீர்த்தமென்ற மனோஹரமான பர்வதத்திற்கு விஜயம்செய்து அங்கு மூன்றுநாள் ஆனந்த மாயிருந்துவிட்டு, நவராத்திரி மஹோத்ஸவத்தை யுத்தே சித்து திருநெல்வேலிக்கு வந்து வழக்கம்போல் சாலி வாடீச்வரர் தேவாலயத்தில் தங்கி தர்சனார்த்தம் வரும் சிஷ்யர்களை அனுக்ரஹித்ததுடன், அங்குள்ள ஸ்ரீ சிருங் கேரி மடத்தில் ஸ்ரீமத் சங்கர பகவத் பாதாசார்யார் மூர்த்தி

யொன்றை பிரதிஷ்டை செய்துகொடுத்து விசேஷமாக அனுக்ரஹித்தார்கள்.

பிறகு திருச்செந்தூர், நாங்குனேரி மார்க்கமாக திருவனந்தபுரம் ஸம்ஸ்தானத்தில் தோவாழக்கோட்டை என்ற கிராமத்தில் பிரவேசிக்கும் சமயம், மஹாராஜாவின் உத்தரவுப்படி ஸகல ராஜமரியாதைகளுடன் வரவேற்கப் பட்டு, அங்குள்ள ராஜ அரண்மனையில் தங்கினார்கள். அங்கிருந்து கன்யாகுமாரி க்ஷேத்திரம் சென்று மூன்று நாள் அங்கே அம்பிகையை தர்சனம் செய்துவிட்டு, ஸஞ்சாரக்கிரமமாக ஸௌம்ய வருஷ மார்க்கசீர்ஷ பௌர்ணமீ தினம் (26-12-1909) காலை ஐந்து மணிக்கு ராஜதானியான திருவனந்தபுரத்திற்கு இரண்டு மைல் தூரத்திலுள்ள கரமனை நதியில் ஸ்நாநாதிகளை முடித்துக்கொண்டு ஸம்ஸ்தான மந்திரி ஸர் பி. ராஜகோபாலாசார்யார் முதலான அதிகாரிகளுக்கு தர்சனம் கொடுத்தார்கள். பிறகு புரவாஸிகளால் பூர்ணகும்பாதி மரியாதைகளுடன் சேவிக்கப்பெற்று, ரத்ன கிரீடம் முதலான ஆஸ்தான சின்னங்களால் அலங்கரிக்கப்பெற்றவராய் பல்லக்கில் ஆரோஹணம் செய்து, ஸகலவித ராஜ மரியாதைகளுடன் ராஜவீதி வழியாக விஜயம்செய்து, கோட்டைவாசலுக்கு வந்துசேர்ந்தார்கள். அங்கு தம் பரிஜனங்களுடன் காத்துக்கொண்டிருந்த மஹாராஜர் ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து நல்வரவு ஸமர்ப்பிக்கையில் அவருடைய பக்தி சிரத்தையைக்கண்டு மிக்க ஸந்தோஷப்பட்டு பல மந்திராக்ஷதைகள் கொடுத்து அனுக்ரஹித்து அனுமதிகொடுத்துவிட்டு, பிறகு கோட்டைக்குள் பிரவேசித்து நான்கு



திருவனந்தபுரம் மஹாராஜா குலசேகர ராமவர்மா



காலடி கும்பாபிஷேகம்

வீதிகளிலும் ஊர்வலம் வந்து வாஸத்திற்காக ஸித்தப் படுத்தியிருந்த அரண்மனைக்கு வந்துசேர்ந்தார்கள். மஹாராஜர் வகையாக பாததூளி பூஜை முதலிய உபசாரங்கள் நடந்தன. அந்த ராஜதானியில் மஹாராஜராலும் மற்றும் புரவாஸிகளாலும் விசேஷமாக ஆதரிக்கப்பட்டு எட்டுநாள் வாஸம் செய்தார்கள். மஹாராஜர் அடிக்கடி தர்சனத்திற்கு வந்து மந்திரோபதேசம், ஹிதோபதேசங்கள் பெற்று ஆஸ்தான வழக்கப்படி பாதகாணிக்கையாக பதினாயிரம் ரூபாய் அர்ப்பணம் செய்ததுடன், ஒரு யானையையும் காலடிபரிஷ்காரத்தை யுத்தேசித்து இன்னும் பதினாயிரம் ரூபாயும் ஸமர்ப்பணம் செய்தார்கள். மஹாராஜருக்கும் ரத்ன கண்டாபரணம் முதலானது அனுக்ரஹித்து அவருக்கும் புரவாஸிகளுக்கும் பல மந்திராக்ஷதைகள் கொடுத்துவிட்டு பிரயாணமாகி, ஜனார்தன க்ஷேத்திரம் மார்க்கமாக காலடி ஸமீபம் விஜயமானார்கள்.

---

## அத்தியாயம் 11.

## காலடி கும்பாபிஷேகம்.

காலடி ஸமீபம் பெரும்பாவூர் என்ற ஊரில் தங்கியிருக்கும் ஸமயம், ராத்திரி ஸ்வப்னத்தில் ஒரு விதந்து ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் திருஷ்டியில் தோன்றி மந்தஹாஸத்துடன் "மரத்தடியிலேயே இருக்கிறேன். அழைப்பதற்காக வந்தேன்" என்று சொன்னதாகத் தெரிந்தது. இதன் தாத்பர்யம் விளங்கவில்லை. மறுநாள் காலடியில்

ஆலய நிர்மாணமாகி கும்பாபிஷேகத்திற்கு எல்லாம் தயாரா யிருப்பதாக தெரிவிக்க ஏ. ராமசந்திரய்யரும் ஸர்வாதிகாரி ஸ்ரீகண்ட சாஸ்திரிகளும் வந்தவுடன், காலடி ஸன்னிவேச விவரங்களை நன்கு அவர்களிடம் கேட்டுத் தெரிந்துகொண் டதில், ஆலயத்திற்கு ஸமீபத்தில் ஒரு அசோக விருக்ஷ மிருப்பதாகவும் அதன் பக்கம் தான் ஸ்ரீமத் சங்கரபகவத் பாதாசார்யாருடைய மாதாவின் ஸம்ஸ்கார ஸ்தலமென்றும் கேட்டவுடன், தன்னை யழைக்க வந்தது அந்த மாதாவே என்று தீர்மானித்து பரவசராகி கண்களில் நீர் ததும்ப, சரீரம் நடுநடுங்க, பேசமுடியாமல் ஸ்தம்பித்துவிட்டார்கள். பிறகு ஸ்வப்ந விருத்தாந்தத்தைச் சொல்லி ஆசார்ய மாதா வின் பரிபூர்ணமான அனுக்ரஹமிருப்பதாக நிரூபித்து எல்லாரையும் உத்ஸாஹப்படுத்தினார்கள். மறுநாள் காலை யில் காலடிக்கு விஜயம் செய்வதாயும் உத்திரவு செய்தார் கள்.

மறுநாள் அதாவது ஸௌம்ய வருஷம் சுக்ல த்வி தீயை (11-2-1910) காலை எட்டு மணிக்கு காலடிக்கு விஜயம் செய்தார்கள். முதலில் மாதாவின் ஸம்ஸ்கார ஸ்தலத்தில் நமஸ்காராதிகளை செய்துவிட்டு, பிறகு ஸாயங் காலமாய் கால் நடையாக புறப்பட்டு கும்பாபிஷேகத்திற் காக நிர்மாணம் செய்யப்பட்டிருக்கிற யாகசாலை, போஜன சாலை, கிருஹ பங்க்திகள் முதலான ஸகல ஏற்பாடுகளையும் தானே நேரில் பார்த்து ஸந்தோஷித்தார்கள். யாகசாலை யில் நடக்கவேண்டிய ஸகல கார்யங்களையும் நிர்வஹிப்ப தற்காக குணிகல் ராமசாஸ்திரிகளையும் திருநெல்வேலியில் பிரஸித்த வக்கீலாகவும் ஸ்ரீமடம் தர்மாதிகாரியாகவும்இருந்த

தர்மசீல ஏ. கிருஷ்ணஸ்வாமி அய்யரையும் நியமித்தார்கள். முதலில் ஸ்ரீமத் ஆசார்ய மூர்த்தியை மாத்திரம் பிரதிஷ்டை செய்வதாயிருந்தது. பிற்பாடு ஸ்ரீமத் ஆதி ஆசார்யாரே

भजे शारदाम्बामजस्रं मदम्बाम् ॥

என்று ஸ்ரீ சாரதாம்பாளை தன் தாயாராகச் சொல்லியிருப்பதால் ஸ்ரீ சாரதாம்பாளையும் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று ஸங்கல்பித்து இரண்டு ஆலயங்களும் கட்டி ஸித்தமாயிருந்தன. காடுமாதிரி யிருந்த பிரதேசத்தை பரிஷ்காரம் செய்து தேவாலயங்களும், ஸ்ரீ மடமும், நதியில் படித்துரையும், சில ஸ்திரமான ஜாகைகளும், உத்ஸவ தர்சனார்த்தம் வருகிறவர்கள் சௌகர்யத்திற்காக தாத்காலிகமாக அறுநூறு வீடுகளும், இரவு பகல் வித்யாஸம் தெரியாமல் போடப்பட்டிருந்த தீபங்களும், மற்றும் செய்யப்பட்டிருந்த ஸகல ஏற்பாடுகளையும் கவனிக்கும்போது, பரதனுக்கு ஆதித்யம் செய்துவைக்க தன் யோகசக்தியினால் பரத்வாஜ முனிவர் செய்த ஏற்பாடுகளையே உபமானமாகச் சொல்லலாமென்ற ரீதியில் எல்லாம் மிக அழகாகவும் விமரிசையாகவும் அமைந்திருந்தது. இவ்வளவு ஸாமக்கிரியைகளையும் சேகரித்து கார்யங்களையும் நிர்வஹிக்கிற பொறுப்பை திருநெல்வேலி ஜில்லா, அதிலும் விசேஷமாக கல்லிடைக்குறிச்சி, சிஷ்யர்கள் ஏற்றுக்கொண்டு நடத்திக்கொடுத்து தங்கள் குருபக்தியைக் காட்டி கிருதார்த்தர்களான விஷயம் குறிப்பிடத்தக்கது.

மாக சுக்ல பஞ்சமீ ஸோமவாரம் (14—2—1910)

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் யாகசாலைக்கு விஜயமாகி ஸங்கல்பம் செய்வித்தார்கள். அன்றுமுதல் ஏழு நாள் பிரதிஷ்டைக்கு அங்கமான கார்ய கலாபங்கள் நடந்தன. துவாதசி ஸோமவாரம் (21-2-1910) அபிஜித் முஹூர்த்தத்தில் பிரதிஷ்டை யதாக்ரமமாய் நடந்தது. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆலயங்களுக்கு விஜயம் செய்து விசேஷமாக ஸாந்நித்யம் ஏற்படும்படி பூஜாதிகள் செய்து, கூடியிருந்த சிஷ்யர்களுக்கு தீர்த்தப்பிரஸாதம் கொடுத்தனுக்ரஹித்தார்கள். மத்யானம் பங்க்தி பங்க்தியாய் பிராஹ்மண போஜனம் நடந்தது. சாயங்காலம் ஸ்ரீமடத்தின் முன்னிலையில் ஸ்ரீமத் ஆசார்யார் பீடத்தில் அமர்ந்து ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாருடைய மஹிமையைப்பற்றி விஸ்தாரமாக எடுத்துச் சொல்லி, இனி இந்த க்ஷேத்திரத்தில் எல்லா சிஷ்யர்களும் அடிக்கடி வந்து தர்சித்து கிருதார்த்தர்களாக வேண்டுமென்று ஆக்ஞாபித்தார்கள். இந்த க்ஷேத்திர நிர்மாணத்தில் இரண்டு வருஷ காலமாய் மிகவும் ஊக்கத்துடன் பிரயாஸைப்பட்டு குருபக்தியைக் காட்டின ஏ. ராமசந்திரய்யருக்கு "குருபக்தகேஸரி" என்ற பட்டம் கொடுத்து இரத்தினங்களிழைத்த ருத்ராக்ஷகண்டி, சால்வை முதலானவைகளால் ஸம்மானித்தார்கள். அவருக்கு மிகவும் உபகாரமாயிருந்து தன் சில்ப வித்யையை குருஸேவையில் உபயோகப்படுத்திய E. R. ஸுப்பராயரையும் சிலாகித்து அனுக்ரஹித்தார்கள். தன் ஆக்ஞையை சிரஸா வஹித்து வெகு அழகான ரீதியில் ஸ்ரீ சாங்கர கிரந்தாவளியை அச்சிட்டு அன்று ஸமர்ப்பணம் செய்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ் அத்யக்ஷரான

டி. கே. பாலஸுப்ரஹ்மண்ய அய்யருடைய பிரயத்னத்தை மிகவும் சிலாகித்து அனுக்ரஹம் செய்தார்கள். "குரு பக்தசிகாமணி" என்ற பட்டத்தையும் ருத்ராக்ஷகண்டி சால்வைகளையும் பின்னால் அவர்களுக்குக் கொடுத்தார்கள்.

கும்பாபிஷேக தினத்தன்று கூடியிருந்த ஜனங்கள் கணக்கிலகப்படா. இந்தியாவிலுள்ள பல பாகங்களிலிருந்தும் ஏராளமாய் வந்திருந்தார்கள். மைசூர் சிவகங்கா மடாதிபதிகளான ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய அபிநவ ஸச்சிதானந்த பாரதீஸ்வாமிகள், சிதம்பரம் மஹா மஹோபாத்யாய ஹரிஹர சாஸ்திரிகள், மைஸூர் திவான் வி. பி. மாதவராவ், திருவனந்தபுரம் திவான் ஸர் பி. ராஜகோபாலாசாரியார், மைசூர் கௌன்சில் மெம்பர் ஹெச். வி. நஞ்சுண்டய்யா முதலான லௌகிக வைதிக ஜனங்கள் வந்திருந்தார்கள். கும்பாபிஷேகம் நடந்த பிறகு சுமார் மூன்று மாத காலம் ஸ்ரீமத் ஆசார்யார் காலடியிலேயே வாஸம் செய்து ஆசார்ய தர்சனம் செய்துகொண்டு, தர்சனார்த்தம் வரும் சிஷ்யர்களை அனுக்ரஹித்துக்கொண்டு ஆனந்தமாக இருந்து வந்தார்கள். இதன் மத்தியில் மஹா வித்வானயிருந்த கொச்சி மஹாராஜா அவர்களும், அந்தரங்க பக்தரான மைசூர் மஹாராஜா அவர்களும் வந்து மூர்த்திகளையும் ஆசார்யாரையும் தர்சனம் செய்து அனுக்ரஹம் பெற்றுக்கொண்டார்கள். காலடியில் ஸ்ரீமத் ஆசார்யார் ஏகாந்தமாயிருந்த காலத்தில் மந்திரோபதேசங்களையும், ஹிதோபதேசங்களையும், பாஷ்யாதி கிரந்தோபதேசங்களையும் பெற்று கிருதார்த்தர்களானவர்கள் அளவற்றவர்கள். பிறகு கிராம ரக்ஷைக்காக ஒரு அச்வத்த

விருக்ஷத்தில் ஆஞ்சநேயரையும், அசோக விருக்ஷத்தில் கார்த்தவீர்யார்ஜுனரையும் ஆவாஹநம் செய்து, சனி, வியாழன் தினங்களில் பூஜை செய்யும்படி ஆக்ஞை செய்துவிட்டு, அவ்விடத்து விசாரணைப் பொறுப்பை வஹித்து அங்கேயே வாஸம் செய்யும்படி ஏ. ராமசந்திரய்யரை நியமனம் செய்துவிட்டு, காலடியிலிருந்து புறப்பட்டுவிட்டார்கள்.

---

## அத்தியாயம் 12.

### சிருங்கேரிக்குத் திரும்புதல்.

அங்கிருந்து க்ரமமாக சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் பி. ஆர். ஸுந்தரம் அய்யருடைய பிரார்த்தனைக்கு இணங்கி அவர் கிராமமான புதுக்கோடுக்கு விஜயம் செய்து அவர் கிருஹத்திலேயே அவ்வருஷ ஸ்ரீ சங்கர ஜயந்தீ மஹோத்ஸவத்தை நடத்தி, அங்கிருந்து புறப்பட்டு கோயமுத்தூர், நாமக்கல் மார்க்கமாக ஸாதாரண வருஷத்திய சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை யுத்தேசித்து காவேரி வடகரையிலுள்ள அய்யம்பாளையத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்த சமயம் சாதுர்மாஸ்ய ஸங்கல்பத்தை நடத்தி, தாண்டவராயபிள்ளையின் குருபக்தியையும் ஈசுவர பக்தியையும் கொண்டாடி அவருக்கு "பக்த ரத்னம்" என்ற பட்டம் கொடுத்து அனுக்ரஹித்து விட்டு, அங்கிருந்து புறப்பட்டு, சேலம், தர்மபுரி, கிருஷ்ணகிரி மார்க்கமாய் மைசூர் ஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த

கோலார் ஜில்லாவில் பிரவேசித்தார்கள். அந்த சமயம் அங்கு டிப்டி கமிஷனராகவிருந்த ஸி. ஸ்ரீ கண்டேசுவ ரய்யர் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் விசேஷ பக்தி சிரத்தை யுடன் தன் ஜில்லாவில் அவர்களை நாற்பத்தியாறு தினங் கள் நிறுத்திக்கொண்டு உயர்ந்த ரீதியில் உபசரித்து அவர் களுடைய பிரஸாதத்தைப் பெற்றுக்கொண்டார். சிக்க பள்ளாபுரத்திற்கு ஸமீபத்திலுள்ள நந்தீபெட்டம் என்கிற பர்வதத்திற்கு பால்யத்தில் தன் குருநாதருடன் போன ஞாபகத்தில் இப்பொழுதும் போகவேண்டுமென்று ஸ்ரீஸ்வாமிகள் நினைத்ததும் அதற்கு வேண்டிய ஏற்பாடு கள் செய்யப்பட்டன. அங்கு விஜயம்செய்து அங்குள்ள அமிர்தஸரோவரத்தில் ஸ்நாநம்செய்து ஜலத்திற்கு ஸமீ பத்திலேயே கௌபீனம் மாத்திரம் தரித்துக்கொண்டு சரீரமெல்லாம் விபூதி பூசிக்கொண்டு தன் அனுஷ்டானங் களை முடித்துக்கொண்டு ஸாயங்காலம்வரை தியானத்தி லிருந்துவிட்டார்கள். ஜலம் அதிசீதமாயிருந்த கார ணத்தினால் இரவில் மார்பில் வலியேற்பட்டது. சிக்க பள்ளாபுரத்திற்கு வந்து சிலநாள் தங்கி இளைப்பாறிக் கொண்டு பெங்களூர் விஜயம் செய்தார்கள்.

அங்கு அதற்குள் கட்டி முடிந்திருந்த ஸ்ரீமடத்தில் பிரவேசித்து ஸ்வல்ப காலத்தில் இவ்வளவு விசாலமாக வும் அழகாகவும் கட்டின விஷயத்தில் திவான் வி. பி. மாதவராயரை மெச்சி அனுக்ரஹித்தார்கள். ஸ்ரீஸ்வாமி களை எதிர்பார்த்து பெங்களூரில் வந்திருந்த மஹாராஜரை யும் அவர் குடும்பத்தார்களையும் ஸ்ரீமடத்திலேயே வர வழைத்து ஸத்கரித்து ஆதித்யம்செய்து அனுக்ரஹித்து

அவர்கள் செய்த பாதபூஜை முதலானதுகளை பெற்றுக் கொண்டு ஆசிர்வதித்து அனுப்பினார்கள். பிறகு ஒரு நாள் (3-2-1911) ஸாயங்காலம் மஹாராஜரையும் சில பிரமுகர்களையும் வரவழைத்து இந்த மடத்தில் "பாரதீய கீர்வாண ப்ரௌட வித்யாபிவர்த்தினீ" என்ற பெயருடன் ஒரு பாடசாலை ஏற்படுத்துவதாயும் அங்குள்ள வித்யார்த்திகளுக்கும் அத்யாபகர்களுக்கும் வேண்டிய ஸௌகர்யங்களை செய்துகொடுக்க உத்தேசிப்பதாயும், இதற்கு ஆரம்பமாக தத்காலம் பூர்வ மீமாம்ஸா, உத்தர மீமாம்ஸா சாஸ்திரங்களை இரண்டு பண்டிதர்களை நியமித்து எட்டு வித்யார்த்திகளுக்கு அத்யயனம் செய்துவைக்க உத்தேசமென்றும் சொன்னார்கள். ஏற்கனவே வி. பி. மாதவ ராயர் தானே ஒரு அக்ரஹாரம் கட்டி ஸகல சாமான்களுடன் நல்ல யோக்யதையுள்ள பிராஹ்மணர்களுக்கு தானம் செய்ய நினைத்து ஏழு வீடுகள் கட்டித் தயாராயிருப்பதாயும், அவைகளை ஸ்ரீஸ்வாமிகளிடமே அர்ப்பணம் செய்து அவர்கள் மூலமாய் இந்த தர்ம கார்யத்திற்கே உபயோகித்து தன்னை அனுக்ரஹிக்க வேண்டுமென்றும் வேண்டிக்கொண்டார். அப்படியே அங்கீகரித்து மாதவ ராயருடைய உத்தம குணத்தையும் ஔதார்யத்தையும் சிலாகித்து அனுக்ரஹித்தார்கள்.

பங்களூரில் பதிமூன்று தினம் வாஸம்செய்து அங்கிருந்து பிரயாணமாய் அரிசிகரை சமீபம் மால்கல்லு திருப்பதி என்னும் ஸ்தலம் போனார்கள். அங்கிருக்கும் போது, சிருங்கேரியில் திருப்பணி நடந்துகொண்டிருந்த ஸ்ரீ சாரதாம்பாள் ஆலயத்தில் தீப்பிடித்து பெரும் நஷ்டம்



ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகர பாரதீஸ்வாமீகள்

உண்டாயிற்று என்றும், ஆனால் அம்மன் மூர்த்திக்கு ஆவரணம் செய்திருந்த மரமண்டபத்தில் அக்கி ஸம்பந்தப் பட்டும் கூட பிம்பத்தை பாதிக்கவில்லையென்றும், அந்த மூர்த்தியின் மேலிருந்த புஷ்பங்கள் கூட வாடவில்லை யென்றும், ஸமாசாரம் வந்தது. லங்கை பூராவும் அக்கி யால் பீடிக்கப்பட்ட சமயத்திலும் "ஸீதா தேவிக்கு ஒரு வித சிரமமும் ஏற்படாது. அக்கியை அக்கி சுடுமா?" என்று ஆஞ்ஜநேயர் செய்துகொண்ட ஸமாதானம் ஸ்ரீஸ்வாமிகளவர்களின் ஞாபகத்திற்கு வந்தது.

अग्नावग्नेः प्रवृत्तिर्न हि भवति कदाऽपीति वातात्मजोक्तिं
प्रत्यक्षीकर्तुमेवानतजनवितते र्वाणि श्रृङ्गाद्रिवासे ।
अत्युग्राग्निप्ररूढज्वलितकीलास्थिततरुमयवेश्मस्थितामात्ममूर्तिं
मल्लीपुष्पादियुक्तामपि तनुवसनां कीटयुक्तामरक्षः ॥

[பக்திஸுதாதரங்கிணீ பக்கம் 97]

பிறகு தரீகரை, சிவமொக்கா, தீர்த்தஹள்ளி மார்க் கமாக ஸாதாரண வருஷம் பால்குன பகுள த்விதீயை (16-3-1911) காலை ஒன்பது மணிக்கு சிருங்கேரியில் பிரவேசித்து நான்கு வீதிகளிலும் பிரதக்ஷிணமாக வந்து மடத்தில் பிரவேசித்து, ஸ்ரீ சாரதாம்பாள், குருநாதர், வித்யாசங்கரர், இவர்கள் ஆலயங்களுக்குச் சென்று தர்ச னம் செய்து, அக்ரஹார பாததூளி பூஜை முதலான ஸத் காரங்களை பெற்றுக்கொண்டபின், ஸம்ஸ்தான அங்கமான பரிவாரங்களை அங்கேயே நிறுத்திவிட்டு துங்கா நதியைத் தாண்டி நரஸிம்ஹ வனத்திலுள்ள ஆசிரமம் வந்து சேர்ந்

தார்கள். நான்கு வருஷகாலம் ஜன ஸங்கத்தில் கலந்து கொண்டிருந்துவிட்டு இப்பொழுது விஜனமாயும் நிர்மல மாயுமுள்ள தன் ஆசிரமத்திற்கு திரும்பிவந்து சேர்ந்த தில் அவர்களுக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவே யில்லை.

அதன்பின் ஆத்ம நிஷ்டாபரராக ஆனந்தமாயிருந்து வந்தார்கள். ஆனால் பங்களூரில் ஆரம்பிக்க உத்தேசித்த பாடசாலை காரியம் பாக்கியிருந்தபடியால் அது விஷயமாய் ஆலோசித்து அத்வைத வேதாந்த சாஸ்திர பாடம் சொல் லுவதற்கு வள்ளூர் ஸுப்ரஹ்மண்ய சாஸ்திரிகளையும் பூர்வமீமாம்ஸா சாஸ்திர பாடம் சொல்ல பழமாநேரி வைத்யனாத சாஸ்திரிகளையும் நியமித்தார்கள். இவ்விரு பண்டிதர்களும் அந்த ஸமயம் ஸ்ரீஸ்வாமிகளிடமே வேதாந்த சாஸ்திரத்தில் உயர்ந்த பாகங்களை அப்யாஸம் செய்ய வந்திருந்தார்கள். இவர்களை அழைத்துக் கொண்டு ஸ்ரீஸ்வாமிகளின் ஆக்ஞைப்படி குனிகல் ராம சாஸ்திரிகள் பங்களூர் போய் விரோதிகிருத் வைசாக சுக்ல பஞ்சமீ, ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யார் ஜன்ம தினம் அன்று, ஸர் பி. என். கிருஷ்ணமூர்த்தியவர்களின் அத்யக்ஷதையில் ஒரு பெரிய ஸபை கூட்டி பாடசாலையை ஆரம்பித்து வைத்தார்.

---

## அத்தியாயம் 13.

### விதேஹ கைவல்யம்.

தர்ம விருத்திக்காக எவ்வளவு கார்யங்கள் செய்த போதிலும் பொதுவாகவே ஜனங்களிடம் ஆஸ்திக்ய புத்தியும் ஆசாரமும் குறைந்து வருகிறதை யாத்திரை காலத்தில் நன்கு கண்ட ஸ்ரீமத் ஆசார்யாரவர்களுக்கு மனது ஸமாதானப்படாமலே யிருந்தது. சிருங்கேரி கிராமம் மலைகளுக்கும் காடுகளுக்கும் மத்தியிலிருந்தும்கூட அங்கேயும் காப்பிக்கடை முதலிய அனுசாரங்கள் ஏற்பட்டிருப்பதையும், அவைகளில் பிராஹ்மணர்கள்கூட ஸங்கோசமன்னியில் கலந்துகொள்வதையும் தெரிந்து வருத்தம் மிகவும் மேலிட்டது. உத்ஸாஹமும் ஸந்தோஷமும் குறைந்துகொண்டே வந்தது. வேதாந்த சாஸ்திரம் பாடம் சொல்வதில்கூட உத்ஸாஹமில்லை. பிரபஞ்சத்தை விட்டுவிடவேண்டுமென்று நினைத்தார்கள்.

किं पाठयेयं लघुचन्द्रिकां वा किं वा त्यजेयं सकलप्रपञ्चम् ।
त्वमेऽद्य मे ब्रूहि किमत्र कार्यं डोलायितं मामकमम्ब चेतः ॥

[பக்திஸுதாதரங்கிணீ, 161]

என்று அம்பாளிடம் உத்தரவு கேட்டார்கள். தன் குருநாதரிடம் "நான் ஸதாசிவேந்திரர் மாதிரி ஆவேன் என்று சொன்னீர்களே? நான் இன்னம் அந்நிலையை அடையவில்லையே?" என்று கேட்டார்கள்.

नावोचः किं पूर्वं त्वमपि भवेः श्रीसदाशिवेन्द्राभः ।
इति कस्मान्मम ममता देहे जागर्ति गुरुवर ब्रूहि ॥

[பக்திஸுதாதரங்கிணீ, 211]

ஸ்ரீ ஸதாசிவேந்திரர் மாதிரி தானும் ஸகலவித பந்தங்களும் அற்று ஸஞ்சரிக்க வேண்டுமென்று நோக்கம் கொண்டார்கள்.

आशावस्त्रः सदात्मन्यविरतहृदयस्त्यक्तसर्वानुरागः
काये चक्षुर्मुखेष्वप्यनुदितममतः क्वापि कस्मिंश्च काले ।
शैलाग्रेऽरण्यकोणे क्वचिदपि पुलिने क्वापि रेवातटे वा
गङ्गातीरेऽथ तुङ्गातटभुवि च कदा स्वैरचारी भवेयम् ॥

[பக்திஸுதாதரங்கிணீ, 158]

சரீர ஆரோக்யமும் குறைந்துகொண்டே வந்தது. சில வருஷங்களாக குளிர்காலத்தில் இரண்டு மூன்று மாஸம் தொந்தரவு செய்துகொண்டிருந்த இருமல் இப்பொழுது குறையாமல் அதிகப்பட்டு வந்தது. கூடியசீக்கிரம் தன் ஸ்தானத்தில் ஒரு சிஷ்யரை ஏற்படுத்தி அவரிடத்தில் ஸம்ஸ்தான பாரத்தை ஒப்புவித்து அந்த ஸம்பந்தத்திலிருந்து விலகிக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டு அதிகரித்து வந்தது. ஈசுவரனே தன்னைப்போல் ரூபமெடுத்துவந்து அந்த பொறுப்பை வஹித்து ஜனங்களை ஸ்வதர்ம நிரதர்களாகச் செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.

मन्त्रीकाशतनुं प्रगृह्य करुणावारांनिधे सत्वरं
शृङ्गाद्रौ वस मोदतः करुणया व्याख्यानसिंहासने ।
कुर्वन् लोकततिं स्वधर्मनिरतां सौख्यैरशेषैर्वृता-
मद्वैतात्मविबोधपूर्णहृदयां चातन्त्रपर्णापते ॥

[பக்திஸுதாதரங்கிணீ, 340]

சில வருஷகாலமாகவே தன் ஸ்தானத்திற்கு வருவதற்கு யோக்யரென்று தீர்மானித்துக்கொண்டிருந்த, சிருங்கேரி கோபால சாஸ்திரிகள் குமாரர், நரஸிம்ஹ சாஸ்திரிகளைப்பற்றி மைசூர் மஹாராஜருக்குத் தெரிவித்து அவருடைய ஸஹாயத்தைப் பெற்றுவரும்படி குனிகல் ராமசாஸ்திரிகளை பங்களூருக்கு அனுப்பினார்கள். பால்குன சுத்த பௌர்ணமி தினம் (3-3-1912) க்ஷௌர ஸ்நாநம் செய்து துங்கா நதிக்கரையில் ஏறினவுடன் நாபிக்குக் கீழ் சைத்யம் கண்டு வாயுப்பிடிப்பு ஏற்பட்டு நிமிர்ந்து நடக்க சிரமப்பட்டது. இரண்டுநாளில் இது நிவிருத்தியாகிவிட்டது. இருமல் மாத்திரம் நிற்காமல் திரயோதசி தினம் ஜாஸ்தியாய் விட்டபடியால் மறுபடியும் சீக்கிரமாகவே நரஸிம்ஹ சாஸ்திரிகளை அழைத்துவரும்படி குனிகல் ராம சாஸ்திரிகளுக்கு தெரிவிக்கப்பட்டது.

பிரதிதினம் ஸ்நாநம் நியானுதிகள் கிரமப்படி நடந்தன. சரீரத்தில் உபாதி ஜாஸ்தியாயிருக்கும் சமயம் பத்மாஸனத்தில் அமர்ந்து ஸமாதி நிஷ்டராயிருந்து பிரபஞ்சத்தை மறந்து விடுவார்கள். பிராரப்த கர்மம் சரீரத்தைத் தானே பாதிக்க முடியும்? அப்படியே சைத்ர

சுத்த த்விதீயை (20-3-1912) புதவாரத்தன்றும் காலே ஆறு மணிக்கு ஸ்நாநம் செய்து பத்மாஸனத்தில் அமர்ந்து ஒன்பதேகால் மணிவரையில் ஸமாதியிலிருந்தார்கள். பிறகு ஒருநாழிகை இருமல் தொந்தரவு இருந்தது. கை கால்களிலும் கொஞ்சம் வாதத்தின் சேஷ்டை தெரிந்தது. பிறகு எல்லாம் சாந்தமாகி பதினொரு மணிமுதல் அசையாமல் அப்படியே பத்மாஸனத்தில் வீற்றிருந்தார்கள். முப்பது நிமிஷம் சென்று, தான் உள்ளே அநுஸந்தானம் செய்துவந்த ஆனந்தத்தை மந்தஹாஸத்தினால் பிரகடனம் செய்துகொண்டபடியே, பரிச்சின்னத் தன்மையை விட்டு வியாபக ப்ரஹ்மத்துடன் ஒன்றாகக் கலந்தார்கள். சரீரம் தானாகவே சாய்வதைக் கண்டு பூமியில் படுக்கவைத்தார்கள். இவ்விதமான நிர்யாணக் கிரமத்தை யாரும் அனுபவித்திராததினால் அரைமணிநேரம் சென்றுதான் விதேஹ கைவல்யமடைந்து விட்டார்கள் என்று நிச்சயிக்க முடிந்தது. இவ்விதம் அதிசீக்கிரமாய் எதிர்பாராமல் 54வது வயதிலேயே இம்மஹான் திடீரென்று மறைந்தவுடன் ஸகல பிராணி வர்க்கங்களும் அபாரமான துக்கஸாகரத்தில் மூழ்கினார்களென்று சொல்லவேண்டுமோ? நரஸிம்ஹவனத்திலேயே ஆசிரமத்திற்கு சமீபத்தில் அதிஷ்டானம் செய்யப்பட்டது. அவர்கள் ஐந்துவருஷ காலமாக ராத்திரி விசிராந்திக்குப் போகும்முன் ஆராதித்துவந்த பாண லிங்கத்தை அவர்கள் ஆக்ஞாபித்திருந்தபடி அதிஷ்டானத்தில் வைத்து பூஜை செய்யப்பட்டது.

மறுநாள் மத்தியானத்திற்கு மேல்தான் குனிகல் ராமசாஸ்திரிகளும் நரஸிம்ஹ சாஸ்திரிகளும் சிருங்கே

ரிக்கு வந்துசேர்ந்தார்கள். பிறகு சைத்ர கிருஷ்ண ஷஷ்டி (7-4-1912) தினம் மைசூர் ராஜகீய அதிகாரிகளும் ஸ்ரீமடம் அதிகாரிகளும் சிஷ்யர்களும் கூடியிருந்த சமயம் நரஸிம்ஹ சாஸ்திரிகளுக்கு கிரமப்படி ஸந்யாஸாசிரம ஸ்வீகாரம் செய்வித்து ஸ்ரீ சந்திரசேகர பாரதீ என்ற யோக பட்டமும் செய்விக்கப்பட்டது. மறுநாள் ஸம்ஸ்தான ஸம்பிரதாயப்படி வியாக்யான ஸிம்ஹாஸனத்தில் பட்டாபிஷேகமும் செய்யப்பட்டது. குருநாதருடைய பரிபூர்ணமான அனுக்ரஹத்தினால் இவர்களும் வித்யாப்யாஸம், பகவத் ஆராதனம், குருபக்தி, ஸ்வானுபவம் முதலான ஸகல அம்சங்களிலும் உத்தமராக விளங்கி தத்காலம் பீடாதிபத்யம் வஹித்து உலகத்தை அனுக்ரஹித்து வருகிறார்களென்பது யாவரும் அறிந்தவிஷயம். இம்மஹானாலும் முன் இப்பீடத்தை அலங்கரித்து வந்த மஹான்களாலும் ஆதி ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசார்யாருடைய ஆக்ஞையையும் ஸங்கல்பத்தையும் அனுஸரித்து பரிபாலிக்கப்பட்டு மேன்மேலும் உலகரீதியிலும் அத்யாத்மரீதியிலும் மேன்மையடைந்திருக்கிற இந்த பீடத்து சிஷ்யர்களென்று தைர்யமாய் ஸங்கோசமன்னியில் சொல்லிக்கொள்ளும்படியான ஆஸ்திக்ய புத்தியும் தர்மாசரணையும் குருபக்தியும் நிரந்தரமாக ஏற்பட்டு குருவின் அனுக்ரஹம் பெற்று யாவரும் கிருதார்த்தர்களாக வேண்டுமென்று பிரார்த்திப்போமாக!

अनन्तसंसारसमुद्रतार-
नौकायिताभ्यां गुरुभक्तिदाभ्याम् ।



वैराग्यसाम्राज्यदपूजनाभ्यां
नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥

[*பக்தி ஸுதாதரங்கிணீ, 208]



* ஸ்ரீமத் ஆசார்யாரவர்கள் பல ஸந்தர்ப்பங்களில் அனுக்ரஹித்திருக்கும் ஸ்தோத்ரங்களை திரட்டி பக்திஸுதாதரங்கிணீ என்று பெயரிட்டு ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்ஸில் அச்சிடப்பட்டிருக்கிறது.

